4 பக்கங்கள் 15 காசுகள்

பதிவு எண்: எம். 8798.

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 11] மதுரை 1-3-73 வியாழன் [மலர் 51

## தமிழக பட்ஜெட் ஆசிரியர்கள் அதிருப்தி

சென்னை, பிப். 27—

தமிழக அரசின் பட்ஜெட் ஏமாற்றத்தையே தருவதாக தமிழ்நாடு தொடக்கப்பள்ளி ஆசிரியர் கூட்டணி அதிருப்தி தெரிவித்துள்ளது.

சம்பள விகிதங்கள் மாற்றியமைக்கப்படும் என்று ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்த முதுநிலை, இடைநிலை கல்வி ஆசிரியர்கள் ஏமாற்றம் அடைந்துள்ளதாக கூட்டணியின் பொதுச் செயலாளர் திரு முத்துச்சாமி அறிவித்துள்ளார்.

10 ரூபாய் கிராக்கிப் உயர்வு 1972 ஆகஸ்டிலிருந்து தரப்படாதது மட்டுமல்ல, உயர்த்தப்பட்ட தொகையையும் சேமநலநிதியில் சேர்ப்பது கொடுமையானது என்று கண்டித்துள்ளார்.

## காங்கிரசுக்கு ஆள்பிடித்தல்

பாட்னா, பிப். 27—

பீகார் மாநிலத்தில் வேறு கட்சிகளிலிருந்த 15 எம். எல். ஏ.க்களை காங்கிரஸ் கட்சி விலைக்கு வாங்கியுள்ளது.

இந்த 15 எம். எல். ஏ.க்களில் 7 பேர் சிண்டிகேட் காங்கிரஸ்காரர்கள். பிரஜா சோசலிஸ்ட் கட்சியை சேர்ந்தவர்கள் 5 பேரும், ஜார்கண்ட் கட்சியை சேர்ந்த ஒருவரும், சுயேட்சை உறுப்பினர்கள் இருவர். மீதமுள்ள மற்றவர்கள். காங்கிரஸ் கட்சியில் இவர்களை சேர்த்துக் கொள்ள பீகார் மாநில முதலமைச்சர் சிபாரிசு செய்துள்ளாராம். இத்தகவலை பீகார் மாநில காங்கிரஸ் கட்சியின் தலைவர் திரு சாம்பு சரண் அறிவித்தார்.

## கேரளத்தில் மக்கள் எழுச்சி, மேலும் தீவிரம்

# மார்ச் 8-ம் தேதி வரை மறியல்

# 9-ல் சட்டமன்ற பகிஷ்காரம்

திருவனந்தபுரம், பிப். 28—

**அச்சுதமேனன் அரசாங்கத்தின் நீசத்தனமான போலீஸ் அடக்குமுறைக்கு எதிராக, கேரள மக்களின் போராட்டப்பேரெழுச்சி நாளுக்குநாள் மேன்மேலும் விஸ்வரூபம் அடைந்து வருகிறது. சென்ற 26-ம் தேதி முதல் மாநிலம் முழுதும் கலெக்டர் அலுவலகங்கள் முன்பும், தாலுகா அலுவலகங்கள் முன்பும் மறியல் போராட்டம் துவங்கியது. மார்ச் 9-ல் கூடும் சட்டமன்றக் கூட்டத்தில் கவர்னர் உரையை எதிர்க்கட்சிகள் பகிஷ்கரிக்கின்றன.**

சென்ற 21-ம் தேதியன்று மாநிலம் முழுதும்—வரலாறு காணாத வகையில் வெற்றிகரமான 'பந்த்' நடத்தினர். அதற்குப் பின்னர் 26-ம் தேதி கலெக்டர் அலுவலகங்கள் முன்பும், தாலுகா அலுவலகங்கள் முன்பும் மறியல் போராட்டம் துவக்கப்பட்டது.

இந்த மறியல்போராட்டம் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சித் தலைமையிலான எதிர்க்கட்சிகளைக் கொண்ட "மக்கள் உரிமைப் பாதுகாப்புக் குழு"வின் அறைகூவலுக்கிணங்க நடைபெற்றது. மறியலில் 687 பேர் கைது செய்யப்பட்டனர் கைதுசெய்யப்பட்டவர்களில் 292 பேர் அரசு ஊழியர்களும், ஆசிரியர்களும் ஆவர்.

அடக்குமுறைகளை நிறுத்த வேண்டும் வேலை நிறுத்தத்திற்கு எதிரான தடைச்சட்டத்தை வாபஸ் பெற வேண்டும் மகாத்மாகாந்தி கல்லூரியில் மாணவர்கள் மீது நடத்தப்பட்ட போலீஸ் தடியடிக்கு முறையான விசாரணை நடத்த வேண்டும்—முதலிய கோரிக்கைகளை வற்புறுத்தி இந்த மறியல் நடைபெற்றது 26-ம் தேதி துவக்கப்பட்ட மறியல் மார்ச் மாதம் 8-ம் தேதி வரை நீடிக்கிறது

மார்ச் 9-ம் தேதியன்று சட்டசபை கூடுகின்றபோது போலீஸ் அடக்குமுறைகளுக்குக் கண்டனம் தெரிவிக்கும் முறையில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சித் தலைமையில் எதிர்க் கட்சி உறுப்பினர்கள், கவர்னர் உரையை பகிஷ்காரம் செய்வார்கள். அன்று மாநிலத் தலைநகரான திருவனந்தபுரத்தில் ஒரு பிரும்மாண்டமான ஆர்ப்பாட்ட ஊர்வலமும் நடைபெறுகிறது.

இதை முன்னிட்டு மார்ச் 1-ம் தேதியிலிருந்து மாவட்டத் தலைநகர்களில் பெரிய அளவில் பொதுக்கூட்டங்கள் நடைபெறுகின்றன.

### 38,719 பேர் கைது

சம்பள உயர்வுக்காகவும், மற்ற கோரிக்கைகளுக்காகவும் கடந்த ஒரு மாதத்திற்கு மேலாக அரசு ஊழியர்களும் ஆசிரியர்களும் நடத்திவரும் வேலை நிறுத்தப் போராட்டத்தில் சென்ற 24-ம் தேதிவரை 38 ஆயிரத்து 719 பேர் கைது செய்யப்பட்டுள்ளனர்.

ஆசிரியர்களும், அரசு ஊழியர்களும் நடத்திவரும் வேலைநிறுத்தப் போராட்டத்திற்கு நியாயமான தீர்வு காணவேண்டுமென்றும், போலீஸ் அடக்குமுறையை நிறுத்தவேண்டுமென்றும் கோரி, ஆசிரியர்களுடைய, அரசு ஊழியர்களுடைய மனைவிமார்களும் குழந்தைகளும் கூட அரசு அலுவலகங்கள் முன் சத்தியாக்கிரகம் நடத்துகின்றனர்.

அண்மையில், ஆசிரியர்—அரசு ஊழியர்களுடைய 100-க்கும் அதிகமான சின்னஞ் சிறுவர்களும், குழந்தைகளும் அடூர் உதவி கலெக்டர் அலுவலகம் முன் கூட்டமாக உட்கார்ந்து சத்தியாக்கிரகம் நடத்தினர். இந்தச் சத்தியாக்கிரகத்துக்கு தாமஸ் என்ற 6 வயதுள்ள சிறுவன் தலைமை வகித்துப் பிரசங்கம் செய்தான்.

## எம். பி. களுக்கு விதிவிலக்கு ஏன்?

புதுடெல்லி, பிப். 24—

நாடாளுமன்ற உறுப்பினர்கள் வாங்கும் அலவன்சுக்கு வருமான வரி விதிக்கக் கோரும் தனியார் மசோதா நாடாளுமன்றத்தில் தோல்வியுற்றது.

இம்மசோதாவைக் கொண்டுவந்த டாக்டர் கார்னிசிங் நாட்டில் எல்லா விசுத் தனிச் சலுகைகளும் ஒழிக்கப்பட வேண்டுமாதலால் நாடாளுமன்ற உறுப்பினர்கள் மட்டும் விலக்காக இருக்கக்கூடாது என்று கூறினர்.

## மதியழகன் வழக்கு

சென்னை, பிப். 27—

தமிழக சட்டப் பேரவையின் சபாநாயகர் திரு மதியழகன் சென்னை உயர்நீதிமன்றத்தில் தாக்கல் செய்திருந்த இரண்டு ரிட் மனுக்களை இன்று சென்னை உயர்நீதிமன்றம் தள்ளுபடி செய்தது இதனை தலைமைநீதிபதி திரு வீராச்சாமி தலைமையில் நீதிபதிகள் ராமபிரசாத் ராவ், ராகவன் விசாரித்து தள்ளுபடி செய்துள்ளனர்.

## உப ஜனாதிபதியின் கண் முன்பே....

காங்கிரஸ் ஆட்சியில் பெண்களின் கற்பைப் பறிப்போர். சமூக விரோத சக்திகளின் நடவடிக்கைகள் தடுக்கப்படவில்லை. ஆகவே, தங்களுடைய எதிர்காலம் இருண்டிருப்பதற்கு எதிராக ஆர்ப்பாட்டம் செய்யும் இளம் மாணவர்களுக்கு எதிராக போலீஸ் எத்தகைய காட்டுமிராண்டித்தனமான தாக்குதலை நடத்துகிறது தெரியுமா!

டில்லி பல்கலைக்கழகத்தில் பிப். 17-ந் தேதி பட்டமளிப்பு விழா நடைபெற்ற சமயத்தில் அங்கு சாதாரண உடை அணிந்த போலீஸ்காரர்கள் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தனர்.

பட்டமளிப்பு விழாவுக்கு வந்திருந்த சில மாணவர்கள் தங்களுடைய பட்டங்களைக் கிழித்தெறிந்தனர். வேலைக்கு உத்தரவாதம் செய்ய முடியாத பட்டங்களாலும், பதக்கங்களாலும் என்ன பயன் என்று அவர்கள் கேட்டனர்.

மாணவர் தலைவர் ஒருவர் கோஷம் எழுப்பியதைக் கண்டதும் சாதாரண உடையிலிருந்த போலீசார் அவர் மீது பாய்ந்தனர். அவருடைய வாயை மூடி வெளியே இழுத்துக் கொண்டுவந்து போட்டனர்.. அவருடைய வாயிலிந்து இரத்தம் ஒழுகிக் கொண்டிருந்தது

இந்நிகழ்ச்சி இந்திய உபஜனாதிபதியும், டில்லி பல்கலைக் கழக வேந்தருமான ஜி எஸ். பதக், மற்றும் பல பிரமுகர்கள் கண் முன்பே நடந்தது. மாணவர் ஒருவர் இவ்வாறு இம்சிக்கப்படுவதை யாரும் தடுக்கவில்லை.

வெளியே இழுத்து வரப்பட்ட மாணவர் அடித்து நொறுக்கப்பட்டு போலீஸ் வண்டியில் ஏற்றிச் செல்லப்பட்டார். இதைப் படம் பிடிக்க நினைத்தவர்களை போலீஸ் மிரட்டி படம்எடுக்கவிடாமல் தடுத்தனர். இதை ஆட்சேபித்த சிலரையும் போலீசார் தாக்கினர்.

போலீசாரின் இந்த மிருகச்செயலை கண்டித்து இதுபற்றி விசாரணை நடத்துமாறு டில்லி பல்கலைக் கழக ஆசிரியர் சங்கத் தலைவர் குமரேஷ் சக்கரவர்த்தி கோரியுள்ளார்.

இந்திய மாணவர்சங்கமும் கண்டன அறிக்கை விடுத்துள்ளது.

## ஊழல் கமிஷன் கூட்டத்திலிருந்து வெளிநடப்பு

சென்னை, பிப். 27—

பொதுப்பணி ஆற்றுவோர்மீது சுமத்தப்படும் ஊழல் குற்றச்சாட்டுகளை விசாரிக்க தமிழக அரசால் நியமிக்கப்பட்டிருந்தது கூட்டம் இன்று நடைபெற்றது.

இக்கூட்டத்திலிருந்து எதிர்க்கட்சித் தலைவர்களான ஹாண்டே, அனந்தநாயகி, கே டி கே தங்கமணி, வி சுவாமிநாதன், பலராமன், ராஜாராம நாயுடு ஆகியோர் வெளிநடப்பு செய்தனர். இனிமேல் தாங்கள் இக்குழுவோடு ஒத்துழைக்கப்போவதில்லை என அறிவித்துள்ளனர் இக்கூட்டத்தில் இடம் பெற்றிருந்த அதிமுக ஸ்தாபகர் எம் ஜி ஆர் கூட்டத்தில் கலந்து கொள்ளவில்லை.

## இளைஞர் காங்கிரஸ் கூட்டத்தில் குழப்பம்

காரைக்குடி, பிப். 26—

தமிழ்நாடு இளைஞர் காங்கிரஸ் முகாமில் நேற்று பெரும் குழப்பம் ஏற்பட்டது.

நேற்றைய கூட்டத்தில் இளைஞர் காங்கிரஸ் முகாமின் கன்வீனர் திரு. ஜெயவீரபாண்டியன் பேசுகையில், சாதாரண காங்கிரஸ் உறுப்பினர்கள் போக முடியாத பெருபணக்காரர்கள் வீடுகளில் ஏன் மத்திய அமைச்சர்கள் சுப்பிரமணியமும், மோகன்குமாரமங்கலமும் அவர்களுடைய சுற்றுப்பிரயாணத்தின்போது தங்கவேண்டும் என்று கேள்வி கேட்டார்.

இந்தக் கேள்வியை ஜெயவீரபாண்டியன் கேட்டதும் கூட்டத்தில் பெருங் குழப்பம் ஏற்பட்டது.

ஜெயவீரபாண்டியனைப் பேசவிடாமல் கூட்டத்தின் ஒரு பகுதியினர் கூச்சல் போட்டுத் தடுத்தனர். இன்னொரு பகுதியினர் பேச்சைக் கேட்க முடியாதவர்கள் கூட்டத்தைவிட்டு வெளியேறலாம் என்று குரல் எழுப்பினர்.

கூட்டத்திலிருந்த பத்திரிகை நிருபர்களும், புகைப்படம் எடுப்பவர்களும் அங்கிருந்து வெளியேற்றப்பட்டனர்.

இந்தக் கூச்சலும், குழப்பமும் வெகு நேரம் நீடித்தது. பின்னர் மத்திய அமைச்சர் மோகன்குமாரமங்கலம் தலையிட்டு ஜெயவீரபாண்டியனை பேச அனுமதிக்கலாம் என்று கூறியதின் பேரில் குழப்பம் தணிந்தது.

பின்னர் பேசிய மோகன்குமாரமங்கலம் தாம் பணக்காரர் வீட்டில் தங்கியதை மறுக்கவில்லை. "நான் யாருடன் தங்குகிறேன். யாருடன் சாப்பிடுகிறேன் என்பது முக்கியமல்ல என்னுடைய நடத்தையை வைத்துத்தான் பார்க்க வேண்டும்" என்று கூறினர்.

## விலைவாசிபற்றி பேச அனுமதி இல்லை

புதுடில்லி, பிப். 26—

நாடாளுமன்றத்தில் புதனன்று பட்ஜெட் தாக்கல் செய்யப்படுவதற்கு முன்பாக அத்தியாவசியப் பொருள்களின் விலையேற்றம் பற்றி விவாதிக்கவேண்டும் என்று தோழர் ஜோதிர்மாய்பாசு கோரினர்.

ஜனாதிபதி உரையின்மீது விவாதம் தொடங்கியதும் அத்தியாவசியப் பொருள்கள் மார்க்கெட்டிலிருந்து மறைத்து பின்னர் அவற்றின் விலை உயர்ந்துள்ளது என்றும், அத்தியாவசியப் பொருள்களின் விலை 30 சதவிகிதம் உயர்ந்துள்ளது என்றும் கூறினர்.

கூட்டத்துக்குத் தலைமை வகித்த துணை சபாநாயகர் ஜி ஜி ஸ்வெல் விலைவாசி நிலைமை பற்றி எந்த விவாதத்தையும் அனுமதிக்க மறுத்தார் "கூச்சல் போடுவதின் மூலம் நீங்கள் விலைகளை இறங்கச் செய்ய முடியாது" என்றும் அவர் கூறினர்.

## கைத்தறி கமிசன் தீர்ப்பு

சென்னை, பிப். 27—

கைத்தறி தொழில் சம்பந்தமாக ஆராய்ந்து அறிக்கை கொடுக்கும்படி தமிழக அரசால் நியமிக்கப்பட்டிருந்த சந்தானம் தலைமையிலான குழு இன்று தனது அறிக்கையை தமிழக அரசிடம் சமர்ப்பித்தது.

இக்குழு தமிழகம் முழுவதும் சுற்றுப்பயணம் செய்து நிலைமைகளை ஆராய்ந்துள்ளது. தொழிற் சங்க பிரதிநிதிகளையும், தனியார் பிரதிநிதிகளையும் சந்தித்து விவாதித்தது. மேலும் பம்பாய், மைசூர், சூரத் போன்ற இடங்களுக்கும் சென்று நிலைமைகளை ஆராய்ந்து அறிக்கை சமர்ப்பித்துள்ளது.

## இலங்கை திருத்தல்வாதி கட்சியில் இறுதிப் பிளவு

### சந்தர்ப்பவாதக் கொள்கையை பின்பற்றியதின் விளைவு

கொழும்பு பிப். 26—

இலங்கை கம்யூனிஸ்ட் கட்சியில் (திருத்தல்வாதக் கட்சி) பிளவு ஏற்பட்டிருப்பதை அந்தக் கட்சியைச் சேர்ந்த அமைச்சரான பீட்டர் கெனமன் நேற்று இங்கு உறுதிப்படுத்தினர்.

தாம் விரைவில் ஸ்ரீலங்கா கம்யூனிஸ்ட் கட்சி என்ற பெயரில் புதிய கட்சி துவங்கப்போவதாகவும் அவர் அறிவித்தார்.

இலங்கை திருத்தல்வாத கட்சியில் விக்கிரமசிங்கே கோஷ்டிக்கும், பீட்டர் கெனமன் கோஷ்டிக்கும் இடையே இறுதியான பிளவு ஏற்பட்டுவிட்டதை இந்த அறிவிப்பு வெளிப்படுத்தியுள்ளது.

### மூன்று கட்சிகள்

இலங்கை அரசாங்கம் கொண்டுவந்த கறுப்புச் சட்டத்தை (விசாரணைக் கமிஷன் சட்டம்) தொடர்ந்து இலங்கைத் திருத்தல்வாதக் கட்சியில் கடும் வேற்றுமை தோன்றியது.

### தீர்மானம் மதிக்கப்படவில்லை

இந்தச்சட்டத்தை எதிர்க்க வேண்டும் என்று இலங்கை திருத்தல்வாதக் கட்சியின் தலைமை தீர்மானித்தபோதிலும் அரசாங்கத்தில் அமைச்சராக இருந்துகொண்டு பீட்டர் கெனமன், கட்சித் தீர்மானத்தை மதிக்கமுடியாத நிலை ஏற்பட்டது.

சந்தர்ப்பவாதக் கொள்கையைப் பின்பற்றி அரசாங்கத்தில் சிலபதவிகளைப் பெற்ற இலங்கை திருத்தல்வாதக கட்சியில் கட்டுப்பாடு குலைவதும், பிளவு ஏற்படுவதும் தவிர்க்கமுடியாததாகியுள்ளது.

கம்யூனிஸ்ட் கட்சி என்ற பெயரில் தற்போது இலங்கையில் விக்கிரமசிங்கே கட்சி, பீட்டர் கெனமன் கட்சி, சண்முகதாசன் கட்சி ஆகிய மூன்று கட்சிகள் இருக்கின்றன.

## மைசூர் அரசின் குறுகிய பார்வை

### சொந்த மாநிலத்தவருக்கு மட்டுமே வேலையாம்

பெங்களூர், பிப் 26—

அரசாங்கத் தொழில் நிறுவனங்களில் மாதம் ரூ. 500-க்குக் குறைவாகவுள்ள வேலைகளில் மைசூர்மாநிலத்தவர்மட்டுமே நியமிக்கப்படுவார்கள் என்று மைசூர் அரசாங்கம் தீர்மானித்துள்ளது.

மைசூர் சட்டமன்றத்தில் இந்தகவலை பாசன அமைச்சர் நஞ்சகௌடா அறிவித்தார்.

இதே போல் மைசூர் மாநிலத்திலுள்ள எல்லா பொதுத்துறை நிறுவனங்களிலும் ரூ. 500-க்குக் குறைவான சம்பளம் உள்ள வேலைகளில் மைசூர்மாநிலத்தவர்களை மட்டுமே நியமிக்குமாறு மத்திய அரசை கேட்டுக்கொண்டிருப்பதாகவும் அவர்கள் கூறினர்.

### பிளவு முயற்சி பாரீர்

இந்தியாவில் பிறந்த எந்த பிரஜைக்கும் எங்குவேண்டுமானாலும் வாழ்க்கை நடத்தவும், வேலை செய்யவும் உரிமையுண்டு என்று அரசியல் சட்டம் கூறுகிறது.

ஆனால் நடைமுறையில் காண்பதென்ன? இந்திய மக்களிடையே ஒருமைப்பாட்டை வளர்ப்பதற்குப் பதில் காங்கிரஸ் அரசுகள் ஒரு மொழி பேசுவோருக்கும் இன்னொரு மொழி பேசுவோருக்கும் இடையே பிளவை உண்டாக்கும் கொள்கையை பின்பற்றுகின்றன.

## பீகார் சட்டமன்றத்தில் துண்டு பிரசுரம் வீச்சு

பாட்னா பிப் 26—

பீகார் சட்டமன்றத்தின் பட்ஜெட் கூட்டம் இன்று ஆரம்பம் ஆகியது.

கூட்டம்கூடியதும்பார்வையாளர் காலரியிலிருந்த சில துண்டு பிரசுரங்களை வீசினர்.

இது சம்பந்தமாக சோஷலிஸ்ட் கட்சி இளைஞர் பிரிவைச் சேர்ந்த இருவரைக் காவலர் கைது செய்தனர்

## பிரேசில் கம்யூனிஸ்ட் தலைவர்கள் படுகொலை

ரியோடிஜனிரோ, பிப். 25—

பிரேசில் கம்யூனிஸ்ட் தலைவர் கார்லஸ் டானியலி கடந்த டிசம்பர் 30-ம் தேதி படுகொலை செய்யப்பட்டதாக ரியோடிஜனிரோ செய்தியொன்று கூறுகிறது.

அவர் சாபாலோ நகரில் கடந்த ஆண்டு டிசம்பர் 30-ம் தேதி கைது செய்யப்பட்டார். போலீசார் அவருடைய உடைமைகளையும். கடிதங்களையும் பறிமுதல் செய்தனர்.

பிரேசில் கம்யூனிஸ்ட் கட்சியின் வேறு மூன்று தலைவர்களான லிங்கன் ஓஸ்ட், லூயிஸ் கில்லார்டின், லிங்கன், ரோகி ஆகியோர் குவானபாரா என்ற இடத்தில் கடந்த டிசம்பர் 20-ம் தேதிக்கும் 24-ம் தேதிக்கும் இடையே கைது செய்யப்பட்டு படுகொலை செய்யப்பட்டனர்.

இந்தக் காட்டுமிராண்டித்தனமான படுகொலையைக் கண்டித்து பிரேசில் கம்யூனிஸ்ட் கட்சியின் மத்திய கமிட்டி அறிக்கையொன்று விடுத்துள்ளது பிரேசில் பாசிஸ்ட் அரசுக்கு எதிராகப் போராடுமாறு மக்களை அது அறைகூவி அழைத்துள்ளது. புரட்சிகர விழிப்புணர்ச்சியை வளர்க்குமாறும் அது கம்யூனிஸ்டுகளைக் கேட்டுக் கொண்டுள்ளது.

## வட வியட்நாம் ஆஸ்திரேலியா தூதரக உறவு

ஹனாய் பிப். 26—

வடவியட்நாமுக்கும், ஆஸ்திரேலியாவுக்கும் இடையே தூதரக உறவுகளை ஏற்படுத்திக்கொள்ள உடன்பாடு ஏற்பட்டிருப்பதாக வடவியட்நாம் செய்தி ஸ்தாபனம் அறிவிக்கிறது.

## பிரதமர் இந்திரா உதிர்த்த முத்துக்கள்

என்னை அகற்றுவதின் மூலம் ஆந்திரப் பிரச்னையைத் தீர்க்க முடியுமானால் நான் வெளியேற தயாராக இருக்கிறேன்.

—பிரதாப்காரில் பிப் 16ந்தேதி கூட்டத்தில்

தன்னுடைய குரலை உயர்த்திக் கொண்டு பிரதம மந்திரி, "நான் பதவியில் ஒட்டிக் கொண்டிருக்க விரும்பவில்லை. ஆனால் எந்த நிர்ப்பந்தத்தின் விளைவாகவும் நான் போகமாட்டேன். என்னுடைய வேலை முடிந்ததும் நான் போவேன்"

—காங்கிரஸ் பார்லிமெண்டரி கட்சிக் கூட்டத்தில்
(டைம்ஸ் ஆப் இந்தியா பிப் 18)

சில கட்சிகள் எல்லா முனைகளிலும் எதிர்த்து போராடப் போவதாகக் கூறியுள்ளன. நான் போராட்டங்களை வரவேற்கிறேன். போராட்டத்தில்தான் என்னிடமுள்ள சிறந்த ஆற்றல் வெளிப்படுகிறது. இல்லாவிட்டால் நான் சோர்ந்து விடுவேன்.

—காங்கிரஸ் பார்லிமெண்டரி கூட்டத்தில்
(அமிர்தபஜார் பத்திரிகை பிப் 18)

கருப்புக் கொடிகளும், "ஒழிக ஒழிக" கோஷங்களும் "ஹை ஹை" கோஷங்களும் (உ. பி. யில்) இருந்தன. என்னைப் பொறுத்தவரை இதை நான் பொருட்படுத்தவில்லை. ஆனால் எனக்காகக் காத்திருந்தவர்களுக்கு இது சரியாக இருக்காது.

—இந்துஸ்தான் டைம்ஸ் பிப். 18

# தீக்கதிர்

## மக்களுக்கு நிவாரணமில்லை

"புதிய வரியில்லாத பட்ஜெட்டை தயாரித்து விட்டோம் பாரீர்!" என திண்டுக்கல் தேர்தல் களத்திலே வாக்காளர்களை "மயக்கும்" பிரச்சாரம் செய்ய வேண்டுமானல், தமிழக அரசின் 1973—74-ம் ஆண்டின் வரவு செலவுத் திட்டம் பயன்படலாம்,

ஆனல் உண்மை நிலைமையோ வேறு, அது கசப்பானது.

ஏற்கனவே மத்திய அரசும் மாநில அரசும் ஒருவரோடு ஒருவர் போட்டி போடடுக் கொண்டு மக்களது முதுகு ஒடிந்து போகுமளவுக்கு வரிவிதிக்கப்பட்டுள்ளதால், மேலும் வரி விதித்தால் மக்கள் சகிக்க மாட்டார்கள், ஆட்சி புரிவோருக்குச் சரியான தண்டனை வழங்கத் தயாராகி விட்டார்கள் என்ற அச்சத்திலே பிறந்தது தான் தமிழக அரசு புதிய சுமையைத் தவிர்த்து சிறிது உபரி (49 லட்சம்) காட்டிட முயற்சி செய்யும் வரும ஆண்டின் வரவு செலவுத் திட்டம்.

எனினும், தி மு க ஆட்சியின் அடிப்படையான மக்கள் விரோத நடைமுறைக் கொள்கைகள் எதுவும் மாறிவிடவில்லை என்பதற்கு அரசு ஊழியர்களுக்கு அளிக்கப்பட்ட ரூ 10 பஞ்சப்படியை உடனடியாக ஊழியர் கையில் கொடுக்காமல் ஓராண்டிற்கு வைப்பு நிதியில் சேர்ப்பதென்ற அறிவிப்பு ஒரு உதாரணம்.

இதே போல் வீட்டு வாடகை ஈட்டுப்படியை 15 சதவீதமாக உயர்த்தியதும் அற்பசொற்பமான நிவாரணமே.

அரசு ஊழியர்களும், ஆசிரியர்களும் படும் அவதிக்கு இது போதிய நிவாரணமல்ல. இதிலும் 'ஏ' பிரிவு, 'பி', 'சி' பிரிவு என்று பிரித்து இந்தச்சிறிய உதவியை மேலும் அற்பசொற்பமாக ஆக்குவது முறையற்ற செயலாகும்.

நியாயமான பல கோரிக்கைகளை முன்வைத்து நீண்ட நாட்களாகப் போராடிவரும் ஆசிரியர்களுக்கோ, மின்சார ஊழியர்களுக்கோ, கைத்தறித் தொழிலாளர்களுக்கோ, மாணவர்களுக்கோ நீதி வழங்கிடும எந்த வொரு ஆக்கபூர்வமான நடவடிக்கையும் மாநில அரசின் வரவு-செலவுத் திட்டத்தில் காணப்படாததில் ஆச்சர்யமில்லை. தி. மு. க. வின் பழைய கொள்கை தொடருகிறது.

தமிழக அரசு பின்பற்றிவரும் தொழிலாளர் விரோத - தொழிற்சங்க ஒற்றுமைக்கு விரோதமான-மாணவர் விரோத கொள்கைகளில் ஏதேனும் மாற்றம் இருக்கும் என்பதற்கான அறிகுறிகள் எதுவும இல்லை.

விவசாயிகளைப் பொறுத்த வரைக்கும்—குத்தகைதாரர்கள் தாங்கள் சாகுபடி செய்யும் நிலத்தை, அவர்களே வாங்கிக் கொளவதற்குப், தேவையான நிதி உதவி செய்வதற்கும் அரசு புதிய மசோதா ஒன்று கொண்டுவரப்போவதாக அறிவிக்கிறது.

இந்த மசோதாவின் விவரங்கள் வந்த பிறகு நம் கருத்தை வெளியிடுவோம் என்று தெரிவிப்பதுடன், இது சம்பந்தமாக நாம் ஒரு எச்சரிக்கை செய்வது மிக மிக அவசியம் ஆகும்.

தமிழ் நாட்டின் பெரும்பாலான இடங்களில், இன்று வார குத்தகைதாரர்கள் என்று கூறப்படுவோர் நேரடியாக நிலத்தில் இறங்கி பாடுபடக்கூடியவர்கள் அல்லர்.

அரசு புதிய மசோதா கொண்டு வருகையில் இந்த எதார்த்த நிலையைக் கணக்கில் எடுத்துக்கொண்டு, நிலத்தில் நேரடியாக சாகுபடி செய்து உழைப்பவர்களுக்கே வாரம் குத்தகை நிலம் உரிமையாக்கப்படும் வகையில் சட்டம் அமைந்திட வேண்டும்;

விவசாயிகளின்பால் அனுதாப உணர்ச்சி உள்ளதாக தமிழக அரசு, காட்டிக்கொள்கிறது ஆனல், வர்த்தகப்பொருட்களான கரும்பு, பஞ்சு ஆகியவற்றின் விலைகள் பயங்கரமாக வீழ்ச்சியடைந்து கொண்டே செல்லும் அதே சமயத்தில் சாக்கரை விலையும், நூல் விலையும் உயர்ந்து கொண்டே போகின்றனவே. இதைத்தடுத்து—உற்பத்தியாளர்களுக்கு நியாயம் வழங்க தேவையான நடவடிக்கைகள் எடுக்க தி. மு. க. ஆட்சியாளர்களுக்கு தைரியம் வராதது ஏன்?

மில் முதலாளிகள்—சர்க்கரை முதலாளிகளின் கூட்டுச்சதியை முறியடிக்க முன்வராதது ஏன்?

வரவு செலவுத் திட்ட உரையில் இது குறித்து அரசு எததகைய அக்கறையும் கொண்டுள்ளதாகத் தெரியவில்லை.

மேட்டூர் அலுமினியத் தொழிற்சாலையை அரசே மேற்கொள்ள முன்வந்துள்ளது, காலங்கடந்த நடவடிக்கையாயினும் வரவேற்கத் தக்க ஒன்ருகும்.

சுமார் 1 கோடி ரூபாய் ஒவ்வொரு ஆண்டும் மின்சாரக் கட்டணச் சலுகையாக விழுங்கிக் கொண்டிருக்கும் இந்தத் தனியார் நிறுவனம் இது தி மு க ஆட்சியின் ஆரம்ப காலத்திலிருந்தே மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி அரசுடைமையாகக் கோரப்படி வலியுறுத்திட்டியதை ஏற்றிருந்தால், தமிழக அரசுக்கு சுமார் 5 கோடி ரூபாய் நட்டத்தைத தவிர்த்திருக்க முடியும்.

இதே போல் அரசாங்கத்தின் நிதியையும் சலுகைகளையும் பெற்றுக கொண்டு பகற்கொள்ளையடிக்கும் பெரிய தனியார் நிறுவனங்கள் பல உண்டு. இவைகளைப் பற்றியும் தமிழக அரசு விரைவாக மறுபரிசீலனை செய்வது மிகவும் அவசியமாகும்

திரு. கருணநிதியின், வரவு — செலவுத் திட்ட உரையில், இன்று நிலவுகிற கடுமையான மின்நெருக்கடியைப் போக்குவதற்கான அவசர உணர்ச்சி காணப்படவில்லை.

இதற்கான எதிர்காலத் திட்டத்தை அறிவித்துக் கொண்டிருக்கிருரே தவிர, இன்று — இப்பொழுதே — உடனடியாக எடுக்கப்பட வேண்டிய நடவடிக்கைபற்றி—மின் நெருக்கடியை உடனடியாகப் போக்குவதற்கான வழிமுறைகளைப்பற்றி எவ்வித அறிவிப்பும் இல்லை.

இன்று தனியார் பொறுப்பில் உள்ள தனியார் மின் வழங்கும் நிறுவனங்களை அரசுடமையாக்கிவிட்டால் மட்டும் போதா. உடனடியான மின்சார உற்பத்திக்கான தீவிரத்திட்டங்களை ஆராய்ந்து நடவடிக்கை எடுக்காவிட்டால், தமிழகத்தின் பொருளாதார வாழ்வே சீரழிந்து சின்னபின்னமாவதைத் தடுக்க முடியாது. இத்தகையதொரு பயங்கரமான நிலைமை தமிழகத்தைச் சூழ்ந்துள்ளது என்ற அவசர உணர்ச்சி அவரது உரையில் காணப்படவில்லை.

# மின்வெட்டை எதிர்த்து மாபெரும் ஊர்வலம்

## திண்டுக்கல் நகரில் போக்குவரத்து ஒரு மணி நேரம் ஸ்தம்பித்தது

திண்டுக்கல், பிப் 26—

மின்சார வெட்டைக் கண்டித்தும், விலைவாசி உயர்வை கட்டுப்படுத்தக் கோரியும், சி.ஐ.டி.யூ வின், வேண்டுகோளுக்கிணங்க திண்டுக்கல்லில் 25-2-73ம் தேதி ஞாயிறு காலை 10 மணியளவில் பெரும் ஊர்வலம் நடந்தது. ஊர்வலம் செங்கொடி மைதானத்திலிருந்து புறப்பட்டது.

ஊர்வலத்தில் சி. ஐ. டி. யூ சங்கங்களைச் சேர்ந்த தோல் பதனிடும் தொழிலாளர்கள், சுருட்டுத் தொழிலாளர்கள் அரசினர் பூட்டுத் தொழிலாளர்கள், நகர ஐஸ் கம்பெனித் தொழிலாளர்கள், முனிசிபல் தொழிலாளர்கள், மின்சார போர்டு தொழிலாளர்கள், ரயில்வே தொழிலாளர்கள், பாண்டியன் போக்குவரத்து கழக தொழிலாளர்கள்.

விவசாயத் தொழிலாளர்கள், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி தோழர்கள், அனுதாபிகள், இரா தொழிலாளர்கள் மற்றும் 200க்கு மேற்பட்ட பெண்களும் குழந்தைகளும் கூட கலந்து கொண்டனர். 150க்குமேல் சைக்கிள்களும் கலந்து கொண்டன 2000க்கும் அதிகமானேர் கலந்து கொண்ட இந்த ஊர்வலம் செங்கொடி மயமாக காட்சி அளித்தது.

### உணர்ச்சி மிகு முழக்கங்கள்

ஊர்வலத்தில், ஆட்குறைப்புச் செய்யாதே, தொழிற்சங்க ஒற்றுமை ஓங்குக. லே-ஆப்க்கு முழச் சம்பளம் கொடு, வேலை கொடு -இல்லையேல் உதவித் தொகை கொடு, மத்திய மாநில அரசே புதிய வரிகளை போடாதே, விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்து, மண்ணெண்ணைக்கு ரேசன் கார்டு கொடு, ஜெனிரேஷனை குறைக்காதே, வார்டுகள் தோறும் நியாயவிலைக்கடைகளைத் திற, தொழிற் சங்க உரிமையைப் பறிக்காதே. கள்ள மார்க்கெட்காரர்களை கைது செய்,

நாடு முழுமையும் மின்சாரவெட்டு — மத்திய மாநில அரசின் திட்டத்தின் வேட்டு,

கதவடைப்பு, ஆட்குறைப்பு, சம்பள வெட்டு கழகத்தின் சாதனை —மின்சார வெட்டு யாருடைய சாதனை.

என்பன போன்ற கோஷங்களை விண்ணதிர முழக்கிக் கொண்டு, நகர வீதிகளனைத்தையும் வலம் வந்து, கடும் வெய்யிலையும் பொருட்படுத்தாமல் திண்டுக்கல் சப்-கலெக்டர் அலுவலகம் அடைந்து ஆர்ப்பாட்டம் நடத்தினர்கள்.

தோழர்கள் எஸ் ஏ தங்கராஜன், ஏ முனுசாமி, வி எஸ் எம் மரைக்காயர், இ எஸ் சுந்தேம், ஜி பீட்டர் கே சுப்பன், ஏ சார்லஸ் ஆகியோர் மகஜர் சமர்ப்பித்தனர் சப்-கலெக்டர் இல்லாததால் தாசில்தார் மகஜரைப் பெற்றுக் கொண்டு, நகரின் வார்டுகள் அனைத்திலும் பொது மக்களுக்கு மண்ணெண்ணை கிடைக்க எற்பாடு செய்வதாகவும், ஜினிகார்டு உள்ளவர்கள் பெற்றுக் கொள்வதற்கும், ஜினி கார்டு இல்லாதவர்கள் உடன் மனுக்கொடுத்தால், கார்டு தரவும், தாலுகா முழுமையும் இது போல் வழங்க ஏற்பாடு செய்யவும் உறுதிஅளித்தார்

தொழில் நெருக்கடி, லே-ஆப்க்கு முழுச்சம்பளம பற்றிய கோரிக்கைகளை அரசுக்கு தெரிவிப்பதாகவும் கூறினர்.

பின்னர் தோழர் எஸ். ஏ. தங்கராஜன் கூட்டத்தில் பேசினர். அவர், ஊர்வலத்தில் பங்கு கொண்ட அனைவருக்கும் நன்றி தெரிவித்தார்.

இந்த எழுச்சிமிக்க ஊர்வலத்திற்கு, திரளான மக்கள், ரோட்டின் இருபுறமும் கூடியிருந்து உற்சாகமான ஆதரவளித்தனர். ஊர்வலம் சென்ற நேரத்தில் நகரின் போக்குவரத்து ஒரு மணி நேரம் ஸ்தம்பித்துவிட்டது.

## நெல்லை மாவட்டத்தில் இந்திய மாணவர் சங்கம்

நெல்லை, பிப். 24—

நாங்குநேரி உயர்நிலைப் பள்ளியில் இந்திய மாணவர் சங்கஅமைப்புக்கூட்டம் பிப் 20-ம்தேதி அன்று நாங்குநேரியில் நடைபெற்றது. மாநிலக்குழு உறுப்பினர் தோழர் நெல்லையப்பன் தஞ்சையில் நடைபெற்ற மாநில மகாநாட்டின் முடிவுகளை விளக்கிப் பேசினர். நெல்லை மாவட்ட இந்திய மாணவர்சங்கத்தின் தலைவர் தோழர் பழனி மாணவர் சங்கத்தின் கொள்கை லட்சியத்தை விளக்கிப் பேசினர்.

### கயத்தார்

கயத்தார் உயர்நிலைப் பள்ளியில் இந்தியமாணவர் சங்ககிளை அமைப்புக் கூட்டம் பிப்22 தேதிஅன்று கயத்தாரில் நடைபெற்றது.

மாநிலக்குழு உறுப்பினர் தோழர் நெல்லையப்பன் மேற்கு வங்கம் "திகா"லில் நடைபெற்ற விரிவுபடுத்தப்பட்ட மத்திய நிர்வாகக்குழு கூட்டத்தின் முடிவுகளையும், தஞ்சையில் நடைபெற்ற மாநில மாநாட்டின் முடிவுகளையும் விளக்கிப் பேசினர்,

மாவட்ட மாணவர் சங்கத் தலைவர் தோழர் பழனி மாணவர் சங்கத்தின் கொள்கை லட்சியத்தை விளக்கிப்பேசினர்.

மற்றும் தோழர்கள் சம்பத், தியாகராஜன் ஆகியோர் பேசினர். புதிய தலைவர், செயலாளர் தேர்ந்தெடுக்கப்பட்டனர். கூட்டத்தில் கீழ்க்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

நடந்துவரும் பாலிடெக்னிக் போராட்டத்திற்கு இக்குழு தனது ஆதரவைத் தெரிவித்துக் கொள்கிறது மேலும் தங்களது நியாயமான கோரிக்கைகளுக்காக போராடிவரும் பாலிடெக்னிக் மாணவர்களை கைது செய்து சிறையில் அடைத்திருக்கும் தமிழக அரசைஇக்குழு வன்மையாகக் கண்டிக்கிறது, கைது செய்யப்பட்ட மாணவர்களை உடனே விடுதலை செய்யும்படி தமிழக அரசை கேட்டுக் கோள்கிறது.

போராடும் பி. பார்மசி மாணவர்களுக்கு இக்குழு தனது ஆதரவைத் தெரிவித்துக் கொள்கிறது. அவர்களது கோரிகைகளை உடனே நிறைவேற்றும்படி தமிழக அரசை கேட்டுக்கொள்கிறது,

தமிழகத்தில் ஏற்பட்டுள்ள 75 சதவீதம் மின் வெட்டினல் மாணவர்கள், விவசாயிகள், தொழிலாளர்கள் மிகவும் பாதிக்கப்பட்டுள்ளனர் அதுவும் மாணவர்கள் இறுதித் தேர்வுகள் வருகிற படியால் இரவு நேரங்களில் படிக்க முடியவில்லை, ஆகவே மத்திய மாநில அரசுகள் உடன் நடவடிக்கை எடுத்து மின் வெட்டை நீக்கும் படி இக்குழு கேட்டுக்கொள்கிறது.

## மதுரை தாலுகா அளித்த நிதி

மதுரை, பிப். 26—

பிப்ரவரி 18-ம் தேதி தோழர் பி ஆர். அவர்களிடம் கொடுக்கப்பட்ட கட்சி —தீக்கதிர் கட்டிட நிதிக்கு மதுரை தாலுகா விலுள்ள பல்வேறு கிராமங்கள் அளித்த நிதி விபரம் பின் வருமாறு:—

| | ரூ | பை |
|---|---|---|
| பழங்கானத்தம் | 201 | 00 |
| சமயநல்லூர் | 201 | 00 |
| அவனியாபுரம் | 130 | 00 |
| பி. பி. சாவடி | 151 | 00 |
| கோ. புதூர் | 120 | 00 |
| வில்லாபுரம | 107 | 00 |
| பொதும்பு | 102 | 00 |
| அச்சம்பத்து | 101 | 00 |
| திருப்பரங்குன்றம் | 101 | 00 |
| பொன்மேனி | 101 | 00 |
| ஐராவதநல்லூர் | 75 | 50 |
| பெத்தானியாபுரம் | 70 | 00 |
| பாசிங்காபுரம் | 51 | 00 |
| விளாங்குடி | 50 | 00 |
| தாமரைப்பட்டி | 42 | 00 |
| புதிய நகர் | 40 | 00 |
| பூதகுடி பொது வசூல் | 32 | 00 |
| ஆனையூர் | 30 | 00 |
| பாத்திமா நகர் | 27 | 00 |
| சாலைபுதூர் | 25 | 00 |
| சிந்தாமணி | 25 | 00 |
| கோ. பாப்பாக்குடி | 10 | 00 |
| பைகாரா முத்துராமலிங்கபுரம் படிப்பகம் சார்பாக | 10 | 00 |
| கிலைமான் புளியங்குளம்அன்பர் | 2 | 00 |
| மொத்தம் | 1804 | 50 |

## அமைச்சர் சுப்பிரமணியம் மீது உரிமைப்பிரேரணை

புதுடில்லி, பிப். 23—

சஞ்சய் காந்தியின் மாருதி கார் கம்பெனி விவகாரம் நாடாளுமன்றத்தில் மீண்டும் எழுந்தது இவ் விவகாரத்தில் ஒழுங்கீனங்கள் நடந்திருப்பதற்கும் தொழிலபிவிருத்தி அமைச்சர் சி. சுப்ரமணியமும், பாதுகாப்பு உற்பத்தித் துறை அமைச்சர் வி. சி. சுக்லாவும எவ்வாறு சபைக்கு தவருன தகவல்கள் கொடுத்துள்ளார்கள் என்பதற்கும எதிர்க் கட்சி உறுப்பினர்கள் தஸ்தாவேஜுகளை வாசித்துக்காட்டினர்.

அதன் பேரில் இரு அமைச்சர்களுக்கும் எதிராக உரிமைப் பிரேரணை கொண்டு வருவதற்கு சபாநாயகர் தில்லன் அனுமதியளிக்கத தயாராக இருந்தார். எனினும் அரசாங்கத்தின் கருததை அறிவதற்காக தன்னுடைய தீர்மானத்தை அவர் ஒத்திவைத்தார்.

### ஒழுங்கு விதிகள் மீறப்பட்டன

எல்லா ஒழுங்கு விதிகளையும் மீறி பாதுகாப்புத் துறை நிறுவனங்களுக்கு அருகாமையில் மாருதி கார் கம்பெனிக்கான இடம் கொடுக்கப்பட்டுள்ளது என்பதே எதிர்க் கட்சிகளின் குற்றச்சாட்டு. விமானப் படை தலைமை நிலையம் கடுமையான ஆட்சேபம் தெரிவித்தும் இந்த இடத்தைக் கார் கம்பெனிக்குக் கொடுத்துள்ளார்கள் என்று எதிர்க் கட்சிகள் குற்றம் சாட்டின.

இவ் விஷயத்தில் நாடாளுமன்றத்தில் சென்ற டிசம்பர் கூட்டத் தொடரில் எதிர் கட்சிகள் எழுப்பிய போது அமைச்சர்கள் சுக்லாவும் சுப்ரமணியமும் அடியோடு மறுத்தார்கள்,

பாதுகாப்பு இலாகாவிலிருந்து எந்த ஆட்சேபமும் வரவில்லை என்றும். தாம் கூறுவது அதிகாரபூர்வமானது என்றும் அமைச்சர் அப்போது திட்ட வட்டமாகக் கூறினர்.

### விமானப் படை தலைமையகம் எதிர்ப்பு

1971 ஜனவரியிலேயே பாதுகாப்பு அமைச்சகத்துக்கு விமானப்படைத் தலைமை அலுவலகம் எழுதியிருந்த கடிதத்தை சிண்டிகேட் காங்கிரஸ் உறுப்பினர் எஸ். என். மிஸ்ரா படித்துக் காட்டினர். அந்தக் கடிதத்தில் கார் கம்பெனிக்கான இடம் பாதுகாப்பு நிறுவனங்களுககு அருகாமையில் உள்ளது எனறும். இதனுல் ஆபத்து ஏற்படும் எனறும் கூறப்பட்டுள்ளது. அரியான அரசாங்கததை அணுகி கார் கம்பெனிக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் இடத்தை மாற்ற வேண்டும் என்றும் அக்கடிதத்தில் கூறப்பட்டுள்ளது.

### பதிலே இல்லை

இங்கிலையில் மேலும் தாமதமின்றி இவ்விஷயத்தை உரிமைக்குழுவின் பரிசீலனைக்கு விட வேண்டும் என்று எல்லா எதிர்க்கட்சி தலைவர்களும் கோரினர்.

உரிமைப் பிரேரணையை எழுப்ப ஒரு உறுப்பினருக்கு அனுமதி அளித்துவிட்டால் அது பற்றி தீர்மானம் செய்வதை சபாநாயகர் ஒத்தி போடக்கூடாது என்பதற்கு அவர்கள் விதிகளையும் வாசித்துக் காட்டினர்.

தாம் இது விஷயமாக நீண்ட காலததுக்கு முன்பே எழுதியிருந்த போதிலும் அரசாங்கத்திடமிருந்து தமக்குப்பதில் வரவில்லை என்றும் எஸ். என். மிஸ்ரா கூறினர்.

## ஆசிரியைகளுக்கு எதிரான பொய் வழக்கு தள்ளுபடி

மதுரை, பிப். 25—

மதுரை தென் சரகம் சுந்தரம்பாள் பள்ளி ஆசிரியைகளுக்கு எதிராக அந்தப் பள்ளியின் நிர்வாகம் மாஜிஸ்திரேட் கோர்ட்டில் போட்டிருந்த பொய் வழக்கு தள்ளுபடி செய்யப்பட்டது.

இந்தப் பள்ளியில் நியாயமான கோரிக்கைகளுக்காக சம்பளத்தைத் குறைத்துக்கொண்டு கூடுதல் தொகைக்கு ரசீது வாங்குவது, பிராவிடன் பண்டு தொகையைக் கட்டாமலிருப்பது போன்ற ஊழல்களை எதிர்த்து) சடந்த ஜூலை 4-ம் தேதி பிலிருந்து ஆசிரியைகள் போராடி வருகின்றனர்.

போராடும் ஆசிரியைகள் 10 பேரை தற்காலிக வேலை நீக்கம் செய்தது மட்டுமின்றி அவர்கள்மீது ஐ பி சி 447-வது பிரிவின் கீழ் நிர்வாகம் நீதிமன்றத்தில் வழக்கும் தொடுத்தது.

ஆசிரியர் கூட்டணி நடவடிக்கைக்குழு அமைத்து அரசிடம் நியாயம் வழங்குமாறு கோரியது.

பின்னர் டிசம்பர் 16-ம் தேதி சர்வ கட்சி ஆதரவு பெற்ற மாபெரும் ஊர்வலமும் நடைபெற்றது.

பின்னர் மாவட்ட கல்வி அதிகாரி தலையிட்டு பேச்சு நடத்தியும் நிர்வாகம் ஒத்து வரவில்லை.

இதற்கிடையே ஆசிரியைகளுக்கு எதிராக பழிதீர்க்கும் முறையில் நிர்வாகம் கொடுத்திருந்த வழக்கை நீதிமன்றம் பிப். 24ம் தேதி தள்ளுபடி செய்துவிட்டது.

## தனித் தமிழ் சூரப்புலிகளே! பத்தாம் பசலிகளே!

"கம்யூனிஸ்டுகள்தான் தமிழ் மொழியை—"பாஷை"யாக்கி ரத்த "ஜண்டா" நாட்டுவார்கள் என்று கேள்விப்பட்டிருக்கிருேம்.

ஆனல் அண்ணு பெயரை வைத்துக் கொண்டிருககிற கட்சியின் ஏட்டில்கூட கீழ்க்கண்ட சொற்ருெடர் வருகிறது.

"வெகுஜன ஸ்தாபனங்களின் பிரதிநிதிகள்',

இந்த 'வெகுஜனம்' பற்றி அண்ணு செய்த கிண்டல் எத்தனை; எத்தனை?

அதையெல்லாம் மறந்தது ஏன்?...புத்தியை தான் கம்யூனிஸ்டுகளிடம் அடகு வைத்து விட்டீர்கள்? தமிழ் மொழி நடையையுமா அடகு வைத்து விட்டீர்கள்? பாவிகளே!"

—முரசொலி 23—2—73

தனித்தமிழைப் பாதுகாத்திட கோதாவில் இறங்கும் சூரப்புலிகளே! உங்க, தனித்தமிழ்ப் பத்தினித்தனத்தை உங்களது நாலு வரிப் பதிலில்கூட பாதுகாத்திட முடியாமல் தவிப்பது ஏனே?

"புத்தி"
"பாவி"

தமிழ்ச் சொற்களா? மேலே தரப்பட்ட முரசொலிப் பெட்டிச் செய்தி வெளியான அதே பக்கத்தில்—ஒரே ஒருபக்கத்தில் மட்டும் - முரசொலி பயன்படுத்தும் அன்னியச் சொற்கள் எத்தனை தெரியுமா? தர்மலிங்கம், கிருட்டினன், போன்ற மனிதர்களுக்கு இடப்பட்ட பெயர்களை நாம் குறிப்பிடவில்லை. அதே பக்கத்தில் வெளியான ஏனைய அன்னியச் சொற்கள்:

சினிமா, பகிஷ்காரம், ஞானசூன்யம், உதாரணம், விசாரணைக் கமிஷன், ஜனநாயகம், டாக்டர், சூரியன், கிராமம் தினம், லஞ்சம், பாரம்பாயம், வக்கீல், மூலமந்திரம், யூனியன், வசூல்!.........

இப்படியாக பல ஆங்கில, சமஸ்கிருத அராபியச் சொற்கள்.

இந்தச் சொற்களை உபயோகிக்காமல் தமிழ் மொழியை இன்று பயன்படுத்த முடியாது என்பதற்கு உங்களுடைய ஏடே சான்று.

தனித்தமிழ் சூரர்களே! கருணநிதி உதய சூரியன், திராவிடம் போன்ற சொற்களை இன்னும் மாற்றவில்லையே ஏன்? இவைகளை பயன்படுத்திக் கொள்ள உங்களுக்கு வெட்கமில்லை?

## சர்க்கரை உற்பத்தி அதிகரிப்பு விலைகுறையாததேன்

புதுடில்லி, பிப். 26—

இந்த ஆண்டில் சர்க்கரை உற்பத்தி 36 லட்சம் டன்ஞக உயரும் என்று மத்திய உணவு அமைச்சகம் அறிவித்துள்ளது.

சென்ற ஆண்டில் 31 லட்சம் டன்தான் சர்க்கரை உற்பத்தியானது. அதைவிட இந்த ஆண்டில் 5 லட்சம் டன் சர்க்கிரை உற்பத்தி அதிகமாகும் என்று உணவு அமைச்சகம் அறிவித்துள்ளது.

### விலை குறையவில்லையே!

பசுமைப் புரட்சியால் சர்க்கரை உற்பத்தி எவ்வளவுதான் அதிகரித்தாலும் சர்க்கரை விலை குறையவில்லை.

வெளிமார்க்கெட்டில் சர்க்கரை விலை இன்றைக்கும் ரூ 3—50க்குத்தான் விற்கிறது. இதற்கு காரணம் என்ன?

உற்பத்தியான எல்லா சர்க்கரையையும் அரசே கொள்முதல் செய்து நியாயமான விலையில் விநியோகிக்காமல் ஒரு பகுதியை லெவிகொள்முதல் என்றும், மறுபகுதியை சர்க்கரை ஆலை முதலாளிகள் அவர்கள் இஷ்டம் போல் விலையை ஏற்றி மக்களைச் சூரையாடலாம் என்றும் அனுமதித்துள்ளதால்தானே இந்த விலையேற்றம்.

விலையை ஏற்றி கொள்ளையடிக்க அரசாங்கமே லைசென்ஸ் வழங்கியுள்ளபோது கள்ள மார்க்கெட் பதுக்கல் பேர்வழிகளின் குஷியை கேட்கவா வேண்டும்.

## மின்வெட்டை கண்டித்து சென்னையில்

**4—3—73 ஞாயிறு மாலை 4 மணிக்கு**

பிராட்வே லோன் ஸ்குயரிலிருந்து

**மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி, சி. ஐ. டி. யூ. சார்பில்**

## ஊர்வலம் புறப்படும்

புதுவண்ணை அருணசலேஸ்வரர் கோயில் திடலில் பொதுக்கூட்டம் நடைபெறும்.

தோழர்கள் **வி. பி. சிந்தன், பி. ஆர். பரமேஸ்வரன், மைதிலி சிவராமன், எம். வரதன்** ஆகியோர் பேசுவர்.

# தமிழக அரசின் அறிவிப்பு பெரும் ஏமாற்றமே

## என். ஜி. ஓ. சங்கத் தலைவர்கள் கண்டனம்

மதுரை, பிப். 26—

தமிழக அரசின் வரவு— செலவுத் திட்டம் அரசு ஊழியர்களுக்கு பெரும் ஏமாற்றத்தையே அளிக்கிறது என்று அரசு ஊழியர் தலைவர்கள் கண்டனம் தெரிவித்துள்ளார்கள்.

இதுகுறித்து தமிழ்நாடு என். ஜி. ஓக்கள் சங்க மாநில துணைத் தலைவர் ஜே. எஸ். பரதன், ராமநாதபுரம் மாவட்டச் செயலாளர் சுப்ரமணியம், நீலகிரி மாவட்டச் செயலாளர் எம். ரங்கராசன் கோவை மாவட்டச் செயலாளர் என். அருணாசலம்; மதுரை மாவட்டச் செயலாளர் ப. குத்புதீன் ஆகியோர் தமிழக அரசின் அறிவிப்புப்பற்றி கீழ்வரும் அறிக்கை விடுத்துள்ளனர்:

### சேமிப்பு நிதிக்காகவா?

தமிழக அரசின் 1973-74 வரவு-செலவுத் திட்டத்தில் பஞ்சப்படி ரூ 10/ என்று அறிவித்து, அதை பிராவிடெண்ட் பண்டில் சேர்க்க உத்தரவிட்டுள்ளார்கள். நாங்கள் பஞ்சப்படி கேட்பது சேமிப்பு நிதிக்காக அல்ல. உயர்ந்துவரும் விலைவாசிகளை ஈடுகட்டும் வகையில் கேட்கும் பணமேயாகும். 1—8—72 முதல் கொடுக்க வேண்டிய தொகையை இதுவரை காலந்தாழ்த்தியதுமட்டுமல்லாது, கொடுக்கப்படவேண்டிய தொகையைச் சேமிப்பு நிதியில் சேர்த்துள்ளார்கள். இது அரசு ஊழியர்களை பெரிதும் பாதிப்பதோடு, அவர்களைப் போராட்ட பாதைக்கு இட்டுச் செல்கிறது.

சென்னை நகருக்கு 13 சதத்திலிருந்து 15ம், மற்றவர்களுக்கு 8 சதத்திலிருந்து 10 சதமாக வீட்டுவாடகைப் படியை உயர்த்தியது ஏற்கனவே சம்பளக் கமிஷனால் சிபாரிசு செய்யப்பட்டு ஒத்துக்கொள்ளப்பட்டதாகும். இதற்கான நிதி ஒதுக்கீடு ஏற்கனவே செய்யப்பட்டுவிட்டது. இது புது சலுகையல்ல.

### ஏமாற்றமே

மணிக்கு மணி அத்தியாவசியப் பொருள்களின் விலை விஷம்போல் ஏறிவருகிறது. இதை எப்படி சரிகட்டுவது என்று விழித்துக்கொண்டிருக்கும் அரசு ஊழியர்கள், ஆசிரியர்களுக்கு இந்த வரவு செலவுத் திட்டம் ஏமாற்றத்தை அளித்துள்ளது.

# “பட்டம் வேண்டாம் வேலைகொடு”

## கான்பூர் பட்டமளிப்பு விழாவில் மாணவர் முழக்கம்

கான்பூர், பிப். 25—

கான்பூர் பல்கலைக்கழகப் பட்டமளிப்பு விழா நேற்று நடைபெற்றது.

அப்போது கூடியிருந்த மாணவர்கள் எங்களுக்குப் பட்டம் வேண்டாம், வேலை கொடு என்று முழக்கமிட்டார்கள்.

இந்த முழக்கத்துக்கிடையே மாணவர்களுக்குத் துணைவேந்தர் பகத்தர்சன் பட்டங்களை வழங்கினார்.

அந்தப்பட்டங்களை மாணவர்கள் பத்திரிகை நிருபர்களிடம் காட்டி “இந்தத் துண்டு கடுதாசி எங்கள் காலி வயிறை நிரப்ப முடியாது” என்று உரக்கக் கூவினார்கள்.

# பட்ஜெட்கள் தாக்கல்

கல்கத்தா, பிப். 26—

மேற்கு வங்க மாநில அரசு இன்று தனது புதிய ஆண்டு பட்ஜெட்டை தாக்கல் செய்தது.

இதில் ரூ 7 லட்சம் துண்டு விழுந்துள்ளது.

பீகார், ஜம்மு காஷ்மீர் மாநிலங்களும் தங்களது மாநில பட்ஜெட்டுகளை இன்று தாக்கல் செய்தன.

# எதிர்க்கட்சிகள் வெளிநடப்பு

சென்னை பிப். 26—

தமிழக சட்டமன்றத்தில் இன்று பட்ஜெட் தாக்கல் செய்யப்பட்டவுடன் எதிர்க்கட்சிகள் வெளிநடப்பு செய்தன.

பட்ஜெட் காலை 10½ மணிக்கு தாக்கல் செய்யப்பட்டது. ஆனால், அதற்கு முன்னதாக பட்ஜெட்டை 11 மணிக்குத்தான் தாக்கல் செய்ய வேண்டும் என்றும் அதற்கு முன்னதாக, தமிழகத்தில் நிலவும் மின்வெட்டு சம்பந்தமாக விவாதிக்க வேண்டும் என்றும் கே. டி. கே. தங்கமணி ஹாண்டே, பொன்னப்பநாடார் ஆகியோர் வலியுறுத்தினர்,

பட்ஜெட் 11 மணிக்குத்தான தாக்கல் செய்யப்பட வேண்டும் என்பது விதி அல்லவென்றும், எப்பொழுது வேண்டுமானாலும் தாக்கல் செய்யலாம் என்றும் தலைவர் சபாநாயகர் சீனிவாசன் கூறினார்.

பட்ஜெட் மீதான விவாதத்தில் மின்வெட்டு சம்பந்தமாக உறுப்பினர்கள் பேசுவதற்கு வாய்ப்பு இருக்கிறது என்று முதலமைச்சர் கூறிவிட்டு தனது பட்ஜெட் உரையை துவக்கினார்.

உடனே எதிர்க்கட்சி உறுப்பினர்கள் குரலெழுப்பிக்கொண்டு சபையை விட்டு வெளியேறினர்.

# வியட்நாம் நிதி ரூ. 5 ஆயிரம்

## மின் வெட்டைக் கண்டித்து மார்ச் 2-ல் மாவட்ட முழுவதும் ஆர்ப்பாட்டம்

### மதுரை மாவட்ட செயற்குழு முடிவு

மதுரை, பிப். 26—

மதுரை மாவட்டம் முழுவதும் வியட்நாம் உதவி நிதி ரூ 5 ஆயிரம் வசூல் செய்வது என்றும்-மின்வெட்டு, விலைவாசி உயர்வு, இரயில் கட்டண உயர்வு, வேலையின்மை முதலியவற்றை எதிர்த்து மார்ச் 2-ல் ஆர்ப்பாட்டம் நடத்துவது என்றும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மதுரை மாவட்ட செயற்குழு முடிவு செய்துள்ளது.

அண்மையில் மதுரையில் நடந்த மாவட்ட செயற்குழு கூட்டத்தில் இந்த முடிவு எடுக்கப்பட்டது.

மார்ச் 2ந்தேதிய ஆர்ப்பாட்டத்தை விளக்கியும், மத்திய-மாநில அரசுகளின் மக்கள் விரோதக்கொள்கைகளைக்கண்டித்தும் துண்டுப் பிரசுரங்கள் வெளியிடவும் முடிவு செய்யப்பட்டது.

மற்ற முடிவுகள் விவரம் வருமாறு:—

### வியட்நாம் நிதி வசூல்

6-3-73 முதல் 12-3-73ந் தேதி வரை மாவட்டம் பூராவும், வீடுவீடாக சென்று உண்டியல் வசூல் செய்வதென்று முடிவு செய்யப்பட்டது. இந்த வசூல் வேலையில் செயற்குழு தோழர்கள் ஏ. பி பழனிச்சாமி, வி கார்மேகம், மதுரை நகரிலும், என். வரதராஜன், எஸ் ஏ. தங்கராஜன் திண்டுக்கல் வட்டாரத்திலும், கே பி ஜானகியம்மாள் மதுரை தாலுகாவிலும், தோழர் ஏ அப்துல் வஹாப் பெரியகுளம் முனி தாலுகாவிலும், வி. ஏ. கருப்பசாமி சாத்தூர் தாலுகாவிலும் பங்குகொள்ள வேண்டுமென்றும் முடிவாகியது.

மாவட்டக்குழு தோழர்களும் நகர்-தாலுகா கமிட்டி உறுப்பினர்களும் தலைமை ஏற்று எல்லா கிளைகளையும் வசூல் வேலையில் ஈடுபடுத்த வேண்டுமென்றும், 5 ஆயிரம் ரூபாய்க்கு மேல் வசூலிப்பதென்றும் முடிவாகியது.

எல்லா கிளைகளும் வசூல் முழுவதையும் மாநிலக் கமிட்டிக்கு அனுப்பவேண்டும்என்றும் கேட்டுக்கொள்ளப்பட்டது.

### திண்டுக்கல் நாடாளுமன்ற உபதேர்தல் வேலைகள்

பிப்ரவரி மூன்றுவது வாரக்கில் தோழர் பி ராமமூர்த்தி அவர்கள் இத்தொகுதியில் மேற்கொண்ட சுற்றுப்பயணம் குறித்து பரிசீலிக்கப்பட்டது

கடந்த ஜன. 22-ம் தேதி நடந்த மாநிலக் குழுக் கூட்டத்தின் தீர்மானத்தை இத்தொகுதியில் உள்ள மக்களிடம் விரிவாகவும், விரைவாகவும் விளக்கப் பிரச்சாரம் செய்வது என்று முடிவாகியது.

தோழர்கள் ஏ பி பழனிச்சாமி, வி கார்மேகம், கே பி ஜானகியம்மாள், வி ஏ கருப்பசாமி, எஸ் ஏ தங்கராஜன், ஏ புனியசாமி எம் பி மணி வேல் டபிள்யூ ராமச்சந்திரன், நீலமேகம், உ.ச. உலகப்பர், கணபதி, எம் முனியாண்டி, என் வரதராஜன் ஆகிய தோழர்களைக் கொண்ட தேர்தல் கமிட்டி அமைக்கப்பட்டது

இக்கமிட்டிக்கு தோழர் என வரதராஜன் கன்வீனராகச் செயல்படுவார். இக்கமிட்டி கூட்டத்தை 1—3—73-ந் தேதியன்று சோழவந்தானில் நடத்துவதென்றும். ஜனவரி 22-ந் தேதிய மாநிலக் குழுவின் தீர்மானத்தை 30 ஆயிரம் துண்டுப் பிரசுரங்கள் வெளியிடுவதென்றும், இத்தொகுதியிலுள்ள கட்சி அங்கத்தினர்கள், ஆதரவாளர்களது பேரவைக் கூட்டங்களை நடத்துவதென்றும், அரசியல் பிரச்சாரப் பொதுக்கூட்டங்களை விரிவாக நடத்துவதென்றும் தீர்மானிக்கப்பட்டது.

# பாலிடெக்னிக் மாணவர்கள் போராட்டத்திற்கு பெற்றோர்கள் ஆதரவு

சென்னை, பிப். 25—

பாலிடெக்னிக் மாணவர்களின் கோரிக்கைகளுக்கு இதுவரைவாய்மூடிமெளனியாய் உள்ள தமிழக அரசு போலீஸ் உதவியுடன் பாலிடெக்னிக்குகளுக்கு மூடுவிழா நடக்கிறது. மேலும் மாணவர்களது போராட்டங்களை ஒடுக்கும் வகையில் பாலிடெக்னிக் நிர்வாகங்களுடன் அரசு கூட்டுச் சேர்ந்துள்ளது.

இப்படிப்பட்ட நடவடிக்கையின் ஒரு பகுதியாக பிப். 25-ந் தேதி முருகப்ப செட்டியார் நினைவு பாலிடெக்னிக் (ஆவடி-சென்னை) நிர்வாகம் மாணவர்களை “எப்படியாவது” திரும்ப வரவழைக்கும் முயற்சியில் இறங்கியது, அதற்காக பெற்றோர்கள் கூட்டம் ஒன்றை ஏற்பாடு செய்திருந்தது. நிர்வாகத்தின் முகத்தில கரி பூசும் அளவிற்கு, வந்திருந்த பெற்றோர்கள் அனைவரும் போராட்டத்தை ஆதரித்தும், அரசையும் நிர்வாகத்தையும் தொழில்நுட்ப கல்வி இயக்குனர் போக்கையும் கண்டித்து பேசினர்.

### திசைதிருப்பும் முயற்சி

கூட்டம் தங்கள் விருப்பத்திற்கு எதிராக செல்வதை பார்த்த கல்லூரி கரஸ்பாண்டெண்ட் அழகப்பன்,மாணவர்களை அவமதிக்கும் வகையில் வழக்கமானபொய்களை கூறினார். “இந்தப்போராட்டம் கம்யூனிஸ்டுகள் ஆதரவில் நடக்கிறது” என்றும் “பொதுப்பணித்துறை சங்கம் பணம் கொடுக்கிறது” என்றும் வாய் கூசாமல் கூறினார். இதையெல்லாம் சொல்லி பெற்றோர்களை ஏமாற்றிடலாம் என்று எண்ணிய அவரது முயற்சி பெருந் தோல்வியில் முடிந்தது.

உடனே பெற்றோர்களில் ஒருவர் எழுந்து, இதுபோல் மாணவர்களின் உணர்ச்சிகளை அவமதிக்கிறீர்கள். இவ்வாறு கூற முதலமைச்சரிடமிருந்து நீங்கள் ரூபாய்பத்தாயிரம் வாங்கினீர்கள் என்று என்னாலும் கூறமுடியும் என்றார்.

கூட்டத்தின் போக்கு தங்கள் கைகளைவிட்டு நழுவுவதைக்கண்ட நிர்வாகம் தாங்கள் எழுதிவைத்திருந்த ஒரு தீர்மானத்தை உடனே வாசித்தனர் அதில் உடனடியாக கல்லூரியை திறக்கவேண்டும் என்று மட்டும் மொட்டையாக இருக்கவே பெற்றோர்களில் ஒருவர் எழுந்து “கைதான மாணவர்களை விடுதலை செய்து அவர்களுடன் அரசு பேச்சுவார்த்தை நடத்தவேண்டும் எல்லாப் பாலிடெக்னிக்குகளையும் திறக்கவேண்டும் என்று தீர்மானம் இருக்கவேண்டும் என வலியுறுத்திப்பேசினர்.

கல்லூரி முதல்வர் துளியும்வெட்கமில்லாமல் இதை நான் தொழிற் கல்வி இயக்குநரிடம் கேட்டுச் சொல்கிறேன் என்று சொல்லவே “இது என்ன பெற்றோர்கள் கூட்டமா?” என்று கோபத்துடன் பெற்றோர்கள் அனைவரும் வெளியேறினர்.

பின்பு வெளியே இருந்த மாணவர்களிடம் போராட்டத்தை வாழ்த்தி விட்டு கலந்து சென்றனர்.

—ந. நி

# குடியிருப்பு பட்டா கோரி சாலைவாழ் மக்கள் ஆர்ப்பாட்டம்

கோவை, பிப். 26—

குடி தண்ணீர், ரேசன் கார்டு, சாலை வசதி முதலிய கோரி பிப் 9-ந் தேதி, மேட்டுப்பாளையம் கமிட்டி சாலைப்பகுதி மக்கள் ஆர்ப்பாட்ட ஊர்வலம் நடத்தினர்.

கடந்த 15 ஆண்டுகளுக்கு மேலாக சாலை அமைத்து வாழ்ந்துவரும் 300 அரிஜன மக்கள, கட்டிட வேலை, மூட்டை தூக்கும் கூலி வேலை, கைவண்டி இழுத்தல் முதலிய வேலைகளைச் செய்து தினக்கூலி பெற்று வாழ்க்கை நடத்தி வருகின்றனர்,

இவர்களுக்குக்கிடைக்கும் தினக்கூலியைக் கொண்டு வாடகைக்கு குடி இருக்க முடியாது. எனவேதான் சாலையில வசித்து வருகின்றனர்.

இவர்களுக்கு குடும்பக் கார்டு,தண்ணீர், சுகாதாரம் முதலிய வசதிகள் இல்லை. இந்தக் கஷ்டமான நிலையில் குடியிருக்கும் சாலையோரக் குடிசைகளைப் பிரிக்க வேண்டும் என்று அரசு அதிகாரிகள் நோட்டீஸ் கொடுத்துள்ளார்கள்.

அதிகாரிகளின் இந்த விபரீதப்போக்கைக் கண்டித்தும், தாங்கள் குடியிருக்கும் இடங்களைப்பட்டா செய்து கொடுக்கும்படி வலியுறுத்தியும் இந்த ஆர்ப்பாட்ட ஊர்வலம் நடந்தது.

காலை 10 மணிக்கு கமிட்டி சாலைப்பகுதியிலிருந்து ஆண்--பெண்--குழந்தைகள் உட்பட 400-க்கு மேற்பட்டோர் கலந்து கொண்ட ஊர்வலம் புறப்பட்டது. கட்சியின், கோவை நகர வடக்கு டிவிசன் கமிட்டி உறுப்பினர் தோழர் ஜி. பி. நாராயணசாமி தலைமை வகித்தார்.

கோரிக்கைகளைவலியுறுத்தும் முழுக்கங்களை எழுப்பிக் கொண்டு நகரின் முக்கிய வீதிகள் வழியசென்று கலெக்டர் ஆபீஸ்,ரெவின்யூ டிவிசனல் அதிகாரி ஆபீஸ்களுக்குச் சென்றது.

தோழர்கள் எம். பூபதி, கே. ராமசாமி மற்றும் பிரதிநிதிகள் அதிகாரிகளைச் சந்தித்து சாலை வாழ் மக்களின் நிலைமைகளை எடுத்துக் கூறினர்.

ஆர். டி. ஓ. நேரடியாக பொதுமக்களிடத்தில் வந்து, தக்க நடவடிக்கை எடுப்பதாக வாக்குறுதி அளித்தார். பின்னர், அங்கு நடந்த கூட்டத்தில் தோழர்கள் எம். பூபதி, ஜி. பி. நாராயணசாமி, கே ராமசாமி ஆகியோர் பேசினர்.

# ஜனாதிபதி உரையை பகிஷ்கரித்தது ஏன்?

## கம்யூனிஸ்ட் கட்சி(மார்க்சிஸ்ட்) நாடாளுமன்றக்குழு உபதலைவர் தோழர் சுபோத் முகர்ஜி அறிக்கை

புதுடெல்லி, பிப். 26—

மக்கள் பட்டினியால் செத்துக்கொண்டிருக்கிறார்கள். பயங்கரமான விலைவாசி உயர்வைத் தாங்க முடியாமல் போராடும் மக்களின் மீது கடும் அடக்கு முறை ஏவிவிடப்படுகிறது. அரிஜனங்கள் தாக்கப்படுவது அதிகரித்துக் கொண்டே போகிறது. வேலையில்லாத் திண்டாட்டத்தைக் குறைக்க ஒரு நடவடிக்கையும் இல்லை. இவ்வாறு நாடே பயங்கரமான சூழலில் சிக்கித் தவிக்கையில் சம்பிரதாய முறைப்படி பெரிய பந்தாவுடன் ஆரம்பிக்கும் ஜனாதிபதி உரை தேவையா? அது துயருறும் மக்களுக்குச் செய்யும் அவமதிப்பல்லவா? எனவே தான் மார்க்சிஸ்ட் கட்சி நாடாளுமன்றத்தில் ஜனாதிபதியின் உரையைப் பகிஷ்கரித்தது. இது பற்றி மார்க்சிஸ்ட் கட்சியின் நாடாளுமன்ற குழுவின் துணைத் தலைவர் தோழர். சமர் முகர்ஜி பத்திரிகைகளுக்கு விடுத்துள்ள அறிக்கை வருமாறு:—

மக்களை கசக்கிப் பிழியும் பயங்கரமான பல பிரச்சினைகளுக்கிடையில் நாடாளுமன்றத்தின் பட்ஜெட் கூட்டத்தொடர் ஆரம்பமாகி உள்ளது இன்று நாடு முழுவதும் வறட்சியாலும், பஞ்சத்தாலும் சிக்கித் தவிக்கிறது. அதிலும் குறிப்பாக மாராட்டியம, மைசூர், ராஜஸ்தான், திரிபுரா, மேற்கு வங்கத்திலுள்ள சில மாவட்டங்களில நிலைமையோ மிகவும் படுமோசமாக உள்ளது.

### பட்டினிச் சாவுகள்

இந்தப் பகுதிகளில் மக்கள் படும் துன்ப துயரங்களை வார்த்தைகளால் வர்ணிக்கவே முடியாது. உண்ண உணவுப் பொருள் சிறிதுமின்றி— குடிக்க தண்ணீரின்றி— தங்க நிழல்கூட இல்லாமல் மக்கள் படும் இன்னல்களும்— பட்டினியால் மக்கள் தினம் தினம் செத்துக்கொண்டிருக்கும் அவல நிலையையும் சொல்லி முடியாது.

இப்பகுதியில் வாழும் மக்கள் சாப்பிட கஞ்சிகூட கிடைக்காததால் தங்களது ஊரைவிட்டு வெளியேறி— கூட்டம் கூட்டமாக மூட்டை முடிச்சுகளுடன் —குடும்பம் குடும்பமாக நகரங்களை நோக்கி வேலை தேடி வரும் நிலைமையை கண்கொண்டு பார்க்கச் சகிக்கவில்லை.

### கடும் விலைவாசி உயர்வு

மக்கள் அனுபவிக்கும் துயரம் இது மட்டுமல்ல. உணவு மற்றும் அத்தியாவசியப பண்டங்களின் விலைவாசிகள் ராக்கெட் வேகத்தில் தொடர்ந்து உயர்ந்து கொண்டே போவதால் சாதாரண ஏழை, எளிய மக்கள் தங்களது வாழ்க்கையையே நடத்த முடியாமல் தத்தளிக்கிறார்கள். கடுமையான இந்த நிலைமையை சமாளிப்பதற்காக உழைக்கும் சகல பகுதி மக்களும் போராடிக்கொண்டிருக்கிறார்கள்.

மிகக் கடுமையான இந்தச் சூழ்நிலையில் தங்களது குறைந்த பட்ச கோரிக்கைகளையாவது முதலாளிகளும், அரசாங்கமும் ஏற்கும்படி செய்ய, நிர்பந்தப்படுத்த நாடெங்கிலும் மத்திய, மாநில அரசு ஊழியர்களும் ஆசிரியர்களும், உழைக்கும் சகல பகுதி மக்களும் மிகக கடுமையாக போராடிக்கொண்டிருக்கிறார்கள். உழைக்கும் மக்களது நியாயமான இந்தக் கோரிக்கைகளை ஏற்பதற்குப் பதிலாக, அரசாங்கம் அவர்களின் மீது கடுமையான அடக்குமுறையை ஏவிவிட்டுள்ளது.

### துப்பாக்கி ரவைகள், குண்டாந்தடிகள் பரிசு

உதாரணமாக. கேரள மாநிலத்தில் அரசு ஊழியர்கள் சம்பள உயர்வு கேட்டார்கள் என்ற ஒரே காரணத்திற்காக 3 ஆயிரம் அரசு ஊழியர்கள் வேலை நீக்கம் செய்யப்பட்டு வெஞ்சிறைகளில் அடைக்கப்பட்டுள்ள கொடுமை அங்கு நிகழ்ந்து கொண்டிருக்கிறது. துன்ப துயரங்களில் அவதியுறு மக்களின் நியாயமான கோரிக்கைகளுக்கு அரசு தரும் பரிசு கடுமையான போலீஸ் அடக்குமுறை— தடியடி—துப்பாக்கிச் சூடு—சிறைக்கூடம் தான். பட்டினியால் தினம் தினம் செத்துக் கொண்டிருக்கும் திரிபுரா மாநில மக்கள் பஞ்ச நிவாரணம் வேண்டும் என்று கேட்ட குற்றத்திற்காக 3 ஆயிரம் பேர் சிறையில் அடைக்கப்பட்டு துன்புறுத்தப்படுகிறார்கள்.

### ஆந்திராவில் பேயாட்சி

ஆந்திர மாநிலத்தில் மத்திய அரசு மக்களுக்கெதிரான ஒரு பயங்கர அடக்குமுறைப் பேயாட்சியையே நிறுவியுள்ளது. இராணுவமும், மத்திய ரிசர்வ் போலீசும், எல்லையோர பாதுகாப்புப் படையும் குவிக்கப்பட்டு, மக்களின் மீது பயங்கரமான அடக்குமுறையை கட்டவிழ்த்துவிடப்பட்டுள்ளது.

மேற்கு வங்கத்தில் போலீஸ் அடக்குமுறை தவிர பயங்கரமான குண்டர்களின் அராஜக பேயாட்சியும் நிலவுகிறது.

### மூன்றுவது சம்பள கமிஷன்

மத்திய அரசு மூன்றுவது சம்பள கமிஷனை நியமித்து மூன்றாண்டுகளும் 9 மாதமும் முற்றாக முடிந்த பின்னர்கூட இன்னும் வெளிபிடவில்லை;

விரைவில் வெளியிடப்போவதாக மீண்டும் மீண்டும் பல முறை மத்திய அரசு வாக்குறுதியளித்த போதும் இன்னும் வெளியிடப்படவில்லை.

வேலையில்லாத் திண்டாட்டத்தால் அவதியுறும் இளைஞர்களின் எண்ணிக்கை ஆண்டுக்கு ஆண்டு பூதாகரமாக வளர்ச்சிபெற்றுவந்த போதிலும்—வேலையில்லாத் திண்டாட்டத்தைப்போக்க அரசாங்கம் தீவிரமான நடவடிக்கைகள் ஒன்றைக்கூட எடுக்கவில்லை.

### அரிஜனங்களுக்கு அநீதி

நாட்டின் பல பகுதிகளில் நிலப்பிரபுக்களாலும், போலீசாராலும் ஏழை அரிஜன மக்களும், ஆதிவாசி பழங்குடி மக்களும், விவசாயத் தொழிலாளர்களும், தாக்கப்படும் இத்தகைய ஈனத்தனமான செயல்கள் அதிகரித்துக்கொண்டே போகின்றன. படு கேவலமான இந்தக்கொடுஞ் செயல்களை தடுத்து நிறுத்துவதில் மத்திய அரசும், மாநில அரசுகளும் தோல்வியடைந்துவிட்டன.

### பயங்கர அடக்குமுறை

இவை எல்லாவற்றிற்கும் மேலாக மக்களது ஜனநாயக உரிமைகளையும் சிவில் உரிமைகளையும், பறிக்கும் தாக்குதல்கள் நாடெங்கிலும் அதிகரித்துவிட்டன, துப்பாக்கி சூடுகளும் தடியடிப பிரயோகங்களும், கைதுகளும், சிறையில் தள்ளுவதும்தான் அரசாங்கம் மக்களுக்குத் தரும் பதிலாக உள்ளது. போலீசாரின் துப்பாக்கி ரவைகளுக்கும், குண்டாந்தடிக்கும் ஆளாகாத மக்களோ இல்லை. மாணவர்கள், ஆசிரியர்கள், அரசு ஊழியர்கள், விவசாயத் தொழிலாளர்கள், தொழிலாளர்கள். அரிஜனங்கள், பழங்குடி மக்கள் மற்றும் உழைக்கும் சகலபகுதி மக்களும் போலீசாரின் துப்பாக்கிக் குண்டிற்கும், குண்டாந்தடிக்கும் இரையாகப் பலியாகிக் கொண்டிருக்கின்றனர்.

### சம்பிரதாய பந்தா தேவையா?

நம் நாட்டு மக்கள் இன்று அனுபவித்துக் கொண்டிருக்கும் தாங்க முடியாத இன்னல்களையும், துயரங்களையும் கவனிக்காமல அசட்டை செய்து அலட்சியம் காட்டி வரும் அரசின் போக்கு அதிர்ச்சியளிப்பதாக உள்ளது.

மிகப்பயங்கரமான இந்த நிலைமைகளில் சம்பிரதாய முறைப்படி பெரிய பந்தாக்களுடன் ஜனாதிபதியின் உரை நிகழ்த்துவது துடிதுடித்துக் கொண்டிருக்கும் நம்நாட்டு மக்களுக்குச் செய்யும் மிகப் பெரிய அவமதிப்பாகும்.

எனவேதான் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி ஜனாதிபதியின் உரையை பகிஷ்கரிக்க முடிவு செய்துள்ளது என்று தோழர் சமர் முகர்ஜி தனது அறிக்கையில் குறிப்பிட்டுள்ளார்.

# புகளூர் சர்க்கரை ஆலையில் வலதுகளின் கருங்காலித்தனம்

புகளூர், பிப். 26—

தங்களது நியாயமான கோரிக்கைகளை ஏற்க மறுத்ததாலும், பிரச்னைகள் தொழில் தகராறில் இருக்கும்போது, போனஸ் பணத்திலிருந்து பிராவிடெண்ட் பண்டிற்கு பிடித்தம் செய்து அனுப்புவதாக பிப். 10-ந் தேதி ஒருதலைப் பட்சமாக ஆலை நிர்வாகம் போட்ட நோட்டீசை எதிர்த்து பிப். 11-ம் தேதியிலிருந்து புகளூர் சர்க்கரை ஆலைத் தொழிலாளர்கள் உள்ளிருப்பு வேலை நிறுத்தம் செய்தார்கள்.

இந்த வேலைநிறுத்தத்தில் ஒர்க்கர்ஸ் யூனியன, பாட்டாளிகள் சங்கம், எம்ப்ளாயிஸ் யூனியன் ஆகிய சங்கங்கள் ஈடுபட்டன ஆனால் வலது கம்யூனிஸ்டுகள் (ஏ ஐ டி யூ சி) வேலை நிறுத்தத்தில கலந்துகொள்ளாது தொழிற்சாலையில் வேலை பார்த்தனர்.

கேன்யார்டிலும், வயல்களிலும் வெட்டிய கரும்பை அறைத்துக் கொடுக்க வேண்டும். அதற்குப் பிறகு உங்கள் பிரச்சினைகள் தீர்ந்து ஒப்பந்தம் ஏற்படும் வரை விவசாயிகளாகிய நாங்கள் கரும்பு ஆலைக்குச் சப்ளை செய்யமாட்டோம் என்று கடிதமும், சுற்றறிக்கையும் விடுவதாக கரும்பு வளர்ப்போர் சங்கம் வாதிததின்பேரில், கரும்பை அறைத்து முடிந்தவுடன் மீண்டும் பிப். 16-ந் தேதி இரவு 7-15 மணி முதல் உள்ளிருப்பு வேலைநிறுத்தம் தொடங்கினார்கள்.

### ஏ. ஐ. டி. யூ. சி.யின் துரோகம்

அப்பொழுதும் ஏ. ஐ. டி யூ சி தொழிலாளர்கள் தொழிற்சாலையில வேலை செய்து, கருங்காலித்தனம் செய்தார்கள். தொழிலாளர்களைக் காட்டிக் கொடுத்தனர்.

இதன் விளைவாக பிப் 17ந் தேதி பிற்பகல் 2 மணியிலிருந்து வேலை செய்ய மறுத்

(4- பக்கம் பார்க்க)

# ஆளும் கட்சியின் கொள்கைகள்

# மேலும் அம்பலமாகிறது

## சென்ற வாரம் நாடாளுமன்றத்தில்

( நமது டெல்லி நிருபர் )

புதுடெல்லி, பிப். 26—

ஜனாதிபதி திரு. வி. வி. கிரி நாடாளுமன்றத்தில் பட்ஜெட் கூட்டத் தொடரை துவக்கிவைத்துப் பேசுகையில், ஆந்திரப் பிரதேச மாநிலத்தில் தற்போது ஏற்பட்டிருக்கும் பதட்ட நிலைமையைத் தீர்ப்பதற்கு வழி காண்பதில் எல்லோரும் ஒத்துழைக்கும்படி வேண்டினர்.

ஆந்திரப் பிரதேசப் பிரச்சினைக்கு தீர்வுகாண்பதில் வன்முறையை கடைப்பிடிப்பது பற்றி அரசாங்கம் மிகுந்த கவலை கொண்டிருக்கிறது. நமதுநாடு பேணிப் பாதுகாத்துவரும் அடிப்படை நோக்கங்களுக்கு வன்முறை முற்றிலும் மாறுனது. வன்முறையின் விளைவாக உயிருக்கும், உடைமைக்கும் மிகுந்த சேதம் விளைந்திருக்கிறது என்று ஆந்திர காங்கிரசாரின் பெயரைக் குறிப்பிடாமல் கூறினர்.

### ராஷ்டிரபதி உரை பகிஷ்கரிப்பு

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி, ஸ்தாபன காங்கிரஸ், ஜனசங்கம், சுதந்திரா, சம்யுக்த சோஷலிஸ்ட் கட்சி, திராவிட முன்னேற்றக்கழகம் ஆகிய கட்சி உறுப்பினர்கள் ராஷ்டிரபதியின் உரையை பகிஷ்கரித்தனர். பல்வேறு துறைகளில் அரசாங்கத்தின் தோல்விகளை சுட்டிக்காட்டுவதற்காக ராஷ்டிரபதி உரையை பகிஷ்கரிப்பதாக அறிவித்தனர். இதுபற்றி மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி விடுத்த அறிக்கையை முன்னா வெளியிட்டோம். வரவிருக்கும் விற்பனை பருவம் முதல் கோதுமையின் மொத்த வியாபாரத்தை அரசாங்கமே மேற்கொள்ளவிருக்கிறது என்று அவர் அறிவித்தபோது அதனை அவை உறுப்பினர்கள் கைதட்டி வரவேற்றனர். இதையடுத்து அரிசியின் மொத்த வியாபாரத்தையும் அரசாங்கம் மேற்கொள்ளும் என்று அறிவித்தார்.

அரசாங்கம் கடைப்பிடித்துவரும் உள்துறை, வெளிநாட்டுக் கொள்கைகள் சரியானவையே என்று ராஷ்டிரபதி கூறினர். நமது பொருளாதாரம், கழகங்கள், மக்கள் ஆகியவை உயிர்துடிப்பு மிக்கவை என்றும், நாடு அபாய நிலையை சந்தித்தபோதெல்லாம் இந்த உண்மை நிரூபிக்கப்பட்டிருக்கிறது என்றும் ராஷ்டிரபதி கூறினர்.

### வெளியுறவு நிலை

நாட்டின் வெளியுறவு நிலைமைப் பற்றி கூறுகையில், போர்க் கைதிகளை திருப்பியனுப்புவதற்கு உதவியாக சம்பந்தப்பட்ட நாடுகள் மூன்றும் பேச்சுவார்த்தை நடத்துவதற்கு ஏற்றதோர் நிலைமையை பாகிஸ்தான் உருவாக்கித் தரும் என்று நம்பிக்கை தெரிவித்தார். வியத்நாமில் அமைதியான தீர்வு ஏற்பட்டிருப்பதை அவர் வரவேற்றார். சீனவுடன் இந்தியா சகஜநிலைமை ஏற்படுத்திக்கொள்ள விரும்புகிறது என்று அவர் வலியுறுத்தினர்.

1970-ஆம் ஆண்டிலும் 1971-ஆம் ஆண்டிலும் தொழில் உற்பத்தியில் இருந்த மந்த நிலைமை நீங்கி 1972ல் ஏழு சதவிகித உயர்வு ஏற்பட்டிருப்பதுகுறித்து ராஷ்டிரபதி மகிழ்ச்சி தெரிவித்தார். மின்சாரத் தட்டுப்பாடு நிலைமை இருந்திராவிட்டால் தொழில்உற்பத்தி மேலும் அதிகரித்திருக்கும் என்றும், மின்உற்பத்தியைப் பெருக்குவதற்கு அரசாங்கம் நடவடிக்கைகள் எடுத்து வருகிறது என்றும் கூறினர்.

நாட்டின் நலனுக்கு முதலிடம் கொடுக்குமாறு தொழிலாளர்களுக்கு ராஷ்டிரபதி வேண்டுகோள் விடுத்தார். தங்கு தடை இல்லாத உற்பத்தித் திறனை அதிகரிப்பது, ஊதியம், தொழிலாளர் பங்கு முதலியவை பற்றிக் குறிப்பிட்டார்.

### நிதியமைச்சர் அறிக்கை

நிதியமைச்சர் ஒய். பி. சவான் 1972—73-ம் ஆண்டுக்கான பொருளாதார ஆய்வு அறிக்கை ஒன்றை நாடாளுமன்றத்தில் வழங்கி உரை நிகழ்த்தினர். வளர்ச்சி அளவைவிட அதன் தரத்துக்கே முக்கியத்துவம் அளிக்கவேண்டும் என்று ராஷ்டிரபதி கூறிய கருத்தைக்கூறி இந்திய நாட்டின பொருளாதாரம் சீர்குலைந்து வருவதை நியாயப்படுத்த முயன்றுர்.

1973—74-ம் ஆண்டில் விவசாய உற்பத்தி வழக்கம்போல் இருக்குமானல் இந்த ஆண்டில் பொருளாதாரத்தில் 5 சதவிகிதத்துக்கும அதிகமாக மொத்த வளர்ச்சி ஏற்படக்கூடும் என்று நிதியமைச்சர் கனவு கண்டார்.

இது எவ்வாறு சாத்தியமாகும் இன்றைய பயங்கரமான சூழ்நிலையில்? அதை விளக்கிடும் நேர்மை அவருக்கு இல்லை.

சரியான சந்தர்ப்பங்கள் அளிக்கப்பட்டால் ஏழு முதல் எட்டு சதவிகித வளர்ச்சியை அடைவது கடினமாக இராது என்று ஆகாயக் கோட்டை கட்டினுர் சவாண்.

நடப்பு சம்பா பருவத்தில் உபரி விளைச்சல் ஏற்பட்டால் பண்டங்களின் விலையில் உயர்முகப் போக்கும் குறைந்துவிடும் என்று அண்டப்புழுகு புளுகியது சவாணின் அறிக்கை. ஆயினும், 1972—73ல் உணவு உற்பத்தி குறையும என்று எதிர்பார்க்கப்படுவதால்பண்டங்களின் விலையைக்கட்டுப்படுத்துவதில் மெத்தனமாக இருக்கக்கூடாது என்றும் உணவு தானியங்களை கொள்முதல் செய்து அவற்றை பொதுமக்களுக்கு விநியோகிக்கும் ஏற்பாடுகள் மேலும வலுப்படுத்தப்பட வேண்டும என்றும் எச்சரித்தது.

### வெளியுதவியை குறைக்கப்போகிறதாம்

நிகர வெளியுதவியை படிப்படியாகக் குறைப்பதற்கு இந்திய அரசு திட்டமிட்டிருக்கிறதாம். ஆகவே, ஏற்றுமதி விஷயத்தில் ஆண்டு தோறும் 7 சதவிகித வளர்ச்சி ஏற்பட வேண்டுமென்ற குறிக்கோளை எட்ட வேண்டுமானல், நமது ஏற்றுமதியை பன்முகப்படுத்துவதற்கு மிகுந்த முயற்சி எடுக்க வேண்டுமாம்.

1967—68ல் வெளியுதவி 863 கோடி ரூபாயாக இருந்தது. 1972—73ல் இது 355 கோடி ரூபாயாக குறைந்துவிட்டது. 1972—73ல் வெளியுதவி 123 கோடி ரூபாய்க்கு அதிகமாக இராது என்று எதிர்பார்க்கப்படுகிறது.

உணவுப் பண்டங்களின் விலை குறிப்பிடத்தக்க வகையில் அதிகரித்திருப்பதால் விலைவாசி நிலைமை "தொடர்ந்து கவலை அளிப்பதாக இருக்கிறது" என்று சவாணின் அறிக்கை கூறுகிறது. உணவு தானியக் கொள்முதல் திட்டத்தில் அரசாங்கம் வெற்றி பெற்றுல்தான் பயனுள்ள விலைக் கொள்கையைக் கடைபிடிக்க முடியும் என்று அறிக்கை கூறுகிறது. இது போன்ற அறிக்கைகள் இனி டன் டன்னுக வெளி வந்து கொண்டிருக்கும்.

இந்த ஆண்டு முதல் ரிசர்வ் பாங்கிலிருந்து மாநிலங்களுக்கு அதிகப்பற்றுக் கொடுப்பதை நிறுத்தியிருப்பதையும், கடந்த ஆண்டுகளைவிட பரவலான அலுவல் வரம்பு கொண்ட ஆருவது நிதிக் கமிஷனை நியமித்திருப்பதையும் சவாணின அறிக்கை குறிப்பிடுகிறது. அரசுத்துறை நிறுவனங்கள் செயல்படும் விதம திருப்திகரமாக இல்லை என்று கூறி, அரசுத் துறை முதலீடு வாரியம் அமைத்திருப்பதும் உயர் மட்டக் கமிட்டி ஒன்றை திட்டக்கமிஷன் அமைத்திருப்பதும் பயனுள்ள நடவடிக்கைகள் என்றும் அறிக்கை ஆத்மதிருப்திக் காண்கிறது.

### பணவீக்கத்தை தடுக்க

பொதுத் திட்டங்களில் முதலீடு செய்யும்போது அதன்விளைவாக பணவீக்கம் ஏற்படாமல் பார்த்துக் கொள்வதற்காக மூன்று வழிமுறைகளைக் கடைப்பிடிக்க வேண்டுமென்று அறிக்கை கூறுகிறது.

1. பொதுமக்கள் பண்டங்கள் உபயோகம் வளர்வதைக் கட்டுப்படுத்துவது.

2, நேர்முக, மறைமுக வரிகள் ஆகியவற்றை விவேகமாகப் பயன்படுத்திக் கொள்வதன் மூலம் மேலும் அதிக அளவில் கூடுதல் நிதி வசதிகளைத் திரட்டுவது.

3. தனியார் சேமிப்பு மூலம் நிதி திரட்டுவது ஆகியவை.

இதிலிருந்தே மத்திய அரசு இந்த நாட்டின் மக்களை எப்படிப பார்க்கிறது என்பதையும் நிதி திரட்ட சென்ற 25 ஆண்டுகளாகப் பின்பற்றி வந்த அதே கொள்கையைத்தான் பின்பற்றப்போகிறது என்பதையும் தெரிந்து கொள்ளலாம்.

பிரதானமாக பொருட்களுக்கான தேவையைக் கட்டுப்படுத்துவது என்பது மறைமுக சம்பள முடக்கம என்பதாகும். இதன அவசியத்தையே சவாணின் அறிக்கைதரும் பதில் திருமப வலியுறுத்துகிறது.

சேமிப்பு விகிதத்தையும தனிநபர் வருமான வளர்ச்சியையும் உயர்த்தும் நோக்கத்துடன் குடும்ப நல திட்டத்தை அறுவை சிகிச்சை வேலைகளை மேலும் தீவிரமாக அமல் நடத்த வேண்டும் என்றும் சவாணின் பொருளாதார ஆய்வு அறிக்கை அறுதியிட்டு கூறுகிறது.

### ரயில்வே பட்ஜெட்

சென்ற வாரத்தில் நாடாளுமன்றத்தில் சமர்ப்பிக்கப்பட்ட ரயில்வே பட்ஜெட்டில், 1973 ஏப்ரல் முதல் தேதியிலிருந்து சரக்குக்கட்டணங்களிலும், பயணக் கட்டணங்களிலும் மிகவும் குறைந்த அளவில் உயர்த்துவதாகக் கூறிக் கொண்டு சரக்குக் கட்டணங்கள், பயணக் கட்டணங்கள் ஆகியவற்றை உயர்த்தியுள்ளனர். 44 கோடியே 35 லட்சம் ரூபாய் கூடுதல் கட்டணச் சுமை சுமத்தப்பட்டது. இதில் 21 கோடி 25 லட்சம் ரூபாய் மூன்ரும் வகுப்பு பயணக் கட்டண உயர்வின் மூலமாகக் கிடைக்கும்,

### பாசு மீது நடவடிக்கை ரத்து

சென்ற வாரத்தில் மக்கள் அவையில் முன்னெப்போதும் நிகழ்ந்திராத நிகழ்ச்சி ஒன்று நடந்தது நாடாளுமன்ற நடவடிக்கைகள் ஸ்தம்பித்து விட்டது. இதற்குப் பொறுப்பாளி ஆளுங்கட்சியினரே.

அவைத் தலைவர் ஜி. எஸ். தில்லான், எதிர்க்கட்சி உறுப்பினர்களின் யோசனையை ஏற்றுக் கொண்டதின் பேரில்தான் இதற்கு ஒரு முடிவு காண முடிந்தது நாடாளுமன்ற உறுப்பினர் தோமர் ஜோதிர்மாய்ப சு அவைத் தலைவரின் கட்டளையை மீறியதாகவும் அவர் மீது உள்நோக்குடைய அவதூரான வார்த்தைகளை பேசியதாகவும் அவைத் தலைவர் குறிப்பிட்டு அந்த வார்த்தைகளை வாபஸ் பெறவேண்டும அல்லது அவர் அவையை விட்டு வெளியேற வேண்டும் என றும் கோரினர். தோழர் பாசுவை வெளியேற்றுவதற்காக பாதுகாப்பு அதிகாரி (மார்ஷல்) வந்தபோது எதிர்க்கட்சி உறுப்பினர்கள் தோழர் பாசுவைச்சுற்றி பாதுகாப்பாக நின்றுகொண்டு பாதுகாப்பு அதிகாரி வெளியேற்றவிடாமல் வெற்றிகரமாகத் தடுத்தனர். தோழர் பாசு அவைத் தலைவரின் கட்டளை தவறுனதெனக்கூறி அதை ஏற்க மறுத்தார். அவை நடவடிக்கைகளிலிருந்து இரண்டு நாட்களுக்கு அவரை சஸ்பெண்ட் செய்வதற்கான மசோதா ஒன்றை நாடாளுமன்ற விவகார அமைச்சர் ரகுராமையா கொண்டு வந்தார், இந்த சந்தர்ப்பத்தில் இந்திரா காங்கிரஸ உறுப்பினர்கள் தங்களது தாக்குதல்களை தீவிரமாக்கினர். எதிர்க்கட்சி உறுப்பினர்களும் மிகுந்த கோபக் வேசப்பட்டு ஒருவரையொருவர் நோக்கி சினத்துடன் கூச்சலிட்டனர். இந்த சமயத்தில் இரண்டு எதிர்க்கட்சி உறுப்பினர்கள் குறிப்பு ஒன்றை எடுத்துக் கொண்டு அவைத்தலைவரை அணுகி அவருடன் ஆலோசனை நடத்தினர்.

திராவிட முன்னேற்றக் கழக உறுப்பினர் திரு. இரா செழியன், வலது கம்யூனிஸ்ட் உறுப்பினர் திரு. இந்திரஜித குப்தா ஆகியோர் தாக்கல் செய்த பிரேரணை அதாவது ரகுராமையா தீர்மானத்தை ரத்து செய்யவும் தீர்மானத்தை தில்லான் அறிவித்து அதனை வாசித்துக் காட்டினர். தோழர் பாசுவை சஸ்பெண்டு செய்யும் பிரேரணையை ரத்து செய்யப்பட்டது. இந்திய நாடாளுமன்ற வரலாற்றில் இது ஒரு புதுமை.

---

# ★ பஞ்சப்படியை வெட்ட புள்ளிவிவரம் மோசடியைத் தடுக்க
# ★ நெசவாளர்களுக்கு நிவாரணம்பெற
# ★ பொய்வழக்குகளை வாபஸ்பெற

# சி. ஐ. டி. யூ. தமிழ் மாநிலக் குழு முடிவுகள்

மதுரை, பிப். 26—

தூத்துக்குடியில் இம் மாதம் நடைபெற்ற சி ஐ டி யூ மாநிலக்குழுவின் கூட்ட முடிவுகள் சில ஏற்கனவே வெளியாகியுள்ளன. மேற்படி கூட்டத்தில் மேலும் பல முடிவுகள் எடுக்கப்பட்டன. அவைவருமாறு —

### பஞ்சப்படி மோசடி

தமிழ்நாட்டில், வாழ்க்கைச் செலவு புள்ளியை அரசு தயாரித்து வெளியிடும் முறை பற்றி மாநிலக் குழு விவாதித்தது; பரிசீலித்தது. அரசு கையாளும் முறைகளால், விலைவாசி உயர்வு, வாழ்க்கை செலவு புள்ளியில் முழுமையாக பிரதிபலிக்காதது மட்டுமின்றி, சில சமயங்களில் பகிரங்க மார்க்கெட் விலைகள் செங்குத்தாக உயரும் போது வாழ்க்கைச் செலவு புள்ளி குறையவும் செய்கிறது. புள்ளி விபரம் தயாரிக்கும் மத்திய-மாநில அரசுகளின் அமைப்புகள், பரஸ்பர ஒத்துழைப்புடன், வேண்டுமென்றே பல மோசடிகளில் ஈடுபடுகின்றன.

விலைவாசிகளைச் சேகரிக்கும் முறையில் இந்த மோசடிகள நடைபெறுகின்றன. சில சாமான்களின் விலைகளை உறைய வைத்துவிடுகிருர்கள்; அவற்றின் பகிரங்க மார்க்கெட் விலைகளை முழுமையாக கணக்கில் எடுத்துக் கொள்ள மறுக்கின்றனர். ஆரம்பத்திலே நிர்ணயிக்கப்பட்ட தரமான சாமான்களுக்குப் பதில், குறைந்த விலையுள்ள தரக்குறைவான சாமான்களை கணக்கில் சேர்க்கின்றனர். பழைய புள்ளிகளை புதிய புள்ளிகளாக மாற்றும்போது, முறையற்ற வழிகளைக் கையாளுகின்றனர். இவ்விதம், பஞ்சப்படியை உறைய வைக்கும் நோக்கத்துடன் புள்ளிகளைக் குறைக்கின்றனர்.

இத்தகைய புள்ளி விபர மோசடியின்மூலம், 1972-ல் மட்டும், தமிழ்நாட்டில் தோட்டம் தொழில் தவிர உள்ள இதரபெருந்தொழில்களில் வேலை செய்யும் தொழிலாளர்கள், 15கோடி முதல் 16 8 கோடி ரூபாய் வரை பஞ்சப்படியில் இழந்துள்ளனர் என்று மாநிலக் குழு மதிப்பிட்டது. இந்த மோசடிக்கெதிரான நேரடி நடவடிக்கையில் மாநில முழுவதிலுமுள்ள தொழிலாளர்களை ஒன்று படுத்துவதென குழு முடிவு செய்தது.

காண்ட்ராக்ட் தொழிலாளர் ஒழுங்கு படுத்தும்—ரத்துசெய்யும் சட்டம்1970-ம் ஆண்டிலேயே நாடாளுமன்றத்தில் நிறைவேற்றப்பட்டிருந்தும், அச்சட்டத்தின் கீழ் பிறப்பிக்க வேண்டிய விதிகளை இன்னும் பிறப்பிக்காதிருக்கும் மாநில அரசை கூட்டம் வன்மையாகக் கண்டித்தது காண்ட்ராக்ட் தொழிலாளர்களை வேலைக்கு வைத்துக் கொள்ளும் தனிப் பெரும் முதலாளியாக திமுக. அரசு திகழ்கிறது. பல மட்டங்களில் உள்ள தன் சொந்தக் கட்சிக்காரர்களை பணக்காரர்களாக்க உதவும், ஓங்கி வரும் ஊற்றாக இந்த காண்ட்ராக்ட் முறையை திமுக அரசு கருதுகிறது. எனவே தான் இந்தச்சட்டம்அமுலாவதை தடுக்கும் நோக்கத்துடன், வேண்டுமென்றே விதிகளை இயற்ற மறுத்து வருகிறது. மாநில முழுவதும் மாநில அரசு அலுவலகங்களின் முன்பு ஆர்ப்பாட்டங்கள் நடத்தி,மார்ச்25-ஐ ஆட்சேப தினமாக அனுஷ்டிப்பது என்று கமிட்டி முடிவு செய்துள்ளது.

### நெசவாளர்களுக்கு நிவாரணம்

நூல் விலை அசாதாரணமாக உயர்ந்திருப்பதன் காரணமாக கைத்தறி நெசவாளர்கள் கடுந் துயரத்துக்குள்ளாகியிருப்பதால்கார்டுகளின் அடிப்படையில் நெசவாளர்களுக்கு நியாய விலையில் நூல் சப்ளை செய்யும் பொறுப்பை அரசு மேற்கொள்ள வேண்டும் என்று மாநிலக்குழு கோரிற்று.

### தோல் ஏற்றுமதி பிரச்னை

தோல்பதனிடும் பெரு முதலாளிகளின் நிர்ப்பந்தத்திக்குப் பணிந்து அரசு வர்த்தகக்கழகத்தின் மூலம்வெளிநாட்டுத்தோல் ஏற்றுமதி வியாபாரத்தை நடத்துவதென்ற தன்பழைய முடிவை வாபஸ் பெற்றுக் கொண்டதற்காக இந்திய அரசை, மாநிலக்குழு வன்மையாகக் கண்டித்தது தன்னுடைய பழைய முடிவை இந்திய அரசு அமல்நடத்த வேண்டும் என்று மாநிலக்குழு கோரிற்று.

### பீடித் தொழிலாளர் சம்பள உயர்வு பிரச்னை

ஆயிரம் பீடி சுற்றுவதற்கான அகில இந்திய குறைந்தபட்ச சம்பளத்தை ரூ 3-25 க்கும் 3-50 க்கு மிடையில்தான் நிர்ணயிக்க வேண்டும் என்று, சமீபத்தில் டில்லியில் கூடிய மத்திய—மாநில தொழிலாளர் இலாகா அமைச்சர்கள் முடிவு செய்திருப்பதை மாநிலக் குழு கண்டித்தது. தற்போது கேரளத் தொழிலாளர்கள் ரூ. 4-50 முதல் ரூ 5-50 வரை சம்பளம் பெற்று வருகின்றனர். கர்நாடக அரசு, மைசூர் மாநிலத்தில் குறைந்தபட்சக் கூலி ரூ. 4-50 என்று அதிகார பூர்வமாக அறிவிப்புச் செய்துள்ளது. இந்த நிலையில், தொழிலாளர் இலாகா மந்திரிகள் மாநாட்டின் மேலே கண்ட முடிவு, ஸ்தாபன ரீதியாக திரட்டப்படாதிருக்கும் பீடித் தொழிலாளர்களின் சம்பளத்தை உறைய வைக்கும் முயற்சியே யாகும். இந்த சம்பள உறைவை எதிர்த்தும், பீடித் தொழிலில் 1000 பீடிகள் சுற்ற ரூ 5-50 குறைந்தபட்ச தேசீய சம்பளமாக யிருக்க வேண்டும் என்று கோரியும், 4 தென் மாநிலங்களிலும் ஒரு நாள் வேலை நிறுத்தத்துக்கு ஏற்பாடு செய்து வரும தென் மண்டல பீடித் தொழிலாளர் குழுவின் முயற்சிக்கு முழு ஆதரவளிப்பதென்று மாநிலக் குழு முடிவு செய்துள்ளது.

### வழக்குகளை வாபஸ் பெறுக

சிம்சன் குரூப் கம்பெனிகளில் மீண்டும் சகஜ நிலைமை ஏற்பட்டிருப்பதாலும், இந்த கம்பெனிகளில் தற்போது நிலவும சமாதன சூழ்நிலைகளை மேலும உறுதிப் படுத்துவதற்காகவும், சிம்சன தொழிலாளர்கள் மீது தொடரப்பட்டுள்ள எல்லா கிரிமினல் வழக்குகளையும் வாபஸ் பெறும்படியும், தற்காலிக வேலை நீக்க உத்தரவுகளை ரத்துச் செய்யும்படியும் மாநிலக் குழு கோரிற்று. இக்க மாநிலத்தில் பல்வேறு தொழிற்சாலைகளில் நடந்துள்ள தொழிலாளர் போராட்டங்களின் போது பல தொழிலாளர்கள் மீது தொடரப்பட்ட எல்லா வழக்குகளையும் வாபஸ் பெறும்படியும் மாநிலக் குழு தமிழக அரசைக் கோரிற்று.

### ரெயில்வே தொழிலாளர் மாநாடு

மார்ச் 3, 4 தேதிகளில் பொன்மலையில் நடக்கவிருக்கும் தட்சண ரெயில்வே எம்ப்ளாயீஸ் யூனியனின் (சி ஐ டி யூ) 22-வது மாநாட்டை நேரில் வாழ்த்தும் முறையில், மாநில மெங்கிலுமுள்ள சி ஐ டி யூ ஆதரவாளர்கள் மார்ச் 4-ம் தேதியன்று ஆயிரக் கணக்கில் பொன்மலை நோக்கி திரண்டு வரும்படி மாநிலக்குழு அழைப்பு விடுத்துள்ளது.

### தீர்மானங்கள்

ஹோட்டல் தொழிலாளர்கள், பஞ்சாலை கார்ப்பரேஷன் மில் தொழிலாளர்கள், அரசு போக்கு வரத்துத் தொழிலாளர்கள், மின்சாரத் தொழிலாளர்கள் ஸ்தல ஸ்தாபனத் தொழிலாளர்கள், தோல் பதனிடும் தொழிலாளர்கள், டான்சி, தொழிலாளர்கள் ஆகியோரின் கோரிக்கைகளை ஆதரித்து தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

தமிழக பாலிடெக்னிக் மாணவர்களின் போராட்டம், உதகமண்டலம் ஊசித் தொழிற்சாலை ஊழியர்கள் போராட்டம் ஆகியவற்றை ஆதரித்தும், கவேரி நூற்பாலையையும் நமனசமுத்திரம் புதுக்கோட்டா நூற்பாலையையும் பஞ்சாலைக் கார்ப்பரேஷன் மேற்கொள்ளவேண்டுமென்று கோரியும், பாண்டியன் போக்கு வரத்துக் கழகத்தில் எல்லா தொழிலாளர்களுக்கும் சமசம்பளம் தரவேண்டுமென்று கோரியும், கிராஜுடி திட்டத்தை அமுல் நடத்த மாநில அரசு விதிகளை இயற்றவேண்டுமென்று கோரியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

சேலம் மாவட்டத்தில் பள்ளிபாளையம் பவர்லூம் தொழிலாளர்கள் மீது போடப்பட்டுள்ள வழக்கு, மேட்டூரில் அலுமினியம் தொழிலாளர் போராட்டத்தை யொட்டி தோழர்கள் சீரங்கன், நாராயணன் மீது போடப்பட்டுள்ள வழக்கு, அண்ணமலை பேஸ்ட் காட்டன் மில் தொழிற்சங்கள் நிர்வாகிகள் மீது போடப்பட்டுள்ள வழக்கு ஆகியவற்றை வாபஸ் பெறவேண்டுமென்று கோரியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

கோதையார் மின் திட்டப் பகுதியில் தி மு க. தொழிற்சங்கத் தலைவர்கள் நடத்தி வரும் மலையாளி எதிர்ப்பு பிரச்சாரம் - நடவடிக்கைகளை கண்டித்து ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது

(நமது தொழிற்சங்க நிருபர்)

---

# அ. தி. மு. க. வினரை திண்டுக்கல் நகரவைத் தலைவர் கடத்திச் சென்றதாக புகார்

திண்டுக்கல், பிப். 26—

சென்ற 23—2—73-ம் மாலை 6 மணிக்கு நகர் மன்ற உறுப்பினர்கள் திரு. அ தங்கவேல், திருமதி கனி அம்மாள், (அ தி மு க) இருவரும் அ தி மு க ஊழியர்களான, விஜயராஜ், மாரியப்பன் ஆகியோருடன் பொதுக் கூட்டத்திற்கு வந்துகொண்டிருக்கையில் அனுமந்த நகர் அருகில் நகரவைத் தலைவர் பொன் சீனிவாசன், நகர் மன்ற உறுப்பினர் கோவிந்தன், ரிக்ஷா புகழ் ரெங்கன் ஆகியோர் காரில் வந்து வழி மறித்து, சைக்கிள் செயினை காட்டி, கூட வந்தவர்களை விரட்டிவிட்டு திரு அ. தங்கவேலுவை காரில் இழுத்துப் போட்டுக்கொண்டு சென்று விட்டதாக போலீசில் புகார்கொடுக்கப்பட்டதாகக் கூறப்படுகிறது.

கடத்தப்பட்ட திரு. தங்கவேலுவை, செம்பட்டி, புல்வெட்டிகுளம் அருகே கொண்டு சென்று தி மு க வில் சேர்ந்து விடும்படியும நகாமன்ற ஓட்டெடுப்பில் தனக்கு ஆதரவளிக்கும்படியாகவும் சேர்மன் மிரட்டினுராம்.

### பிடியிலிருந்து தப்ப தங்கவேலின் யுக்தி

தான், கலைஞரின் முன் திமுகவில் சேர்ந்துகொள்ள சம்மதித்து, பின் அவர்களுடன் நல்ல விருந்து உண்டு, திரும்பிவிட்டதாக திரு. தங்கவேல் பொதுக்கூட்டத்தில் அறிவித்தார். அவர்ஒப்புக்கொள்ளாவிட்டால் அவர்கள் காரில் வைத்து இருந்த ஆயுததளவாடங்கள அவரை பதம்பார்த்திருக்கும் என்று கூறினர்.

### அ தி மு க வினர் படையெடுப்பு

இதற்கு முன்னர், தங்கவேல கடத்தப்பட்ட செய்தியறிந்த பெருங்கூட்டம், ஆண்களும, பெண்களும், சிறுவர்களுமாக திரண்டு கலெக்டர் அலுவலகம சென்றனர். தி மு க.வை யும், பொன். சீனிவாசனையும், தி மு க மாண்புகளையும் கூட்டத்தினர் வசை மாரி பொழிந்தனர். சப்-கலெக்டர் ஓடிவந்து திரு. தங்கவேலுவை அரை மணி நேரத்தில் கொண்டுவந்து ஒப்படைப்பதாக உறுதி கூறினர். அரைமணி நேரம் கழித்து தி மு க பிரமுகர் ஓ. என். சிவஞானம கடத்தப்பட்ட தங்கவேலை போலீஸ் ஸ்டேஷனில் ஒப்படைத்தாராம். கூட்டத்தினர் தங்கவேலுவை அழைத்து வந்தனர். காவல்துறை அதிகாரிகள் உடன்வந்து பொதுக்கூட்ட மேடையில் ஒப்படைத்தனர். அதன் பின் கூட்டம் ஆரமபமானது.

### தி மு க காலித்தனத்திற்கு தோழர் எஸ் ஏ தங்கராஜன் கண்டனம்

அ தி மு க வினர் பெருங் கூட்டமாகத் திரண்டுவந்து தோழர் எஸ் ஏ தங்கராஜனை அழைத்துச் சென்றனர், கடத்தப்பட்டு மீண்ட தங்கவேல் பேசும் போது, "நமது அ தி மு க படையுடன், மார்க்சிஸ்ட் கட்சியின் பாட்டாளிப் படை சேர்ந்தால் நம்மை யாராலும் அசைக்க முடியாது. நாட்டுக்கே உழைக்கும் நல்ல இயக்கத்தின் தோழர் எஸ் ஏ தங்கராஜன் நமக்கு நல்ல கருத்துக்களை வழங்குவார்" என்று கூறினர் கூடியிருந்த அ தி மு க வினர் ஆரவாரம் செய்து வரவேற்றனர்.

பின் தோழர் தங்கராஜன் பேசினுர்:—

தி மு கழகத்தினர் கடத்தலில் கைதேர்ந்த மன்னர்கள் இன்று நகர் மன்ற உறுப்பினர்களை கடத்துகின்றனர். ஏற்கனவே வாலாஜாபாத்தில் நடந்ததை நாடறியும், நகரமன்றத்தில் தி. மு. க. மெஜாரிட்டியை இழந்துவிட்டது. தி மு க 16, எதிர்க்கட்சிகள் 17. எனவே கூட்டத்திற்குக் கூட்டம் ஓட்டுகளை பிடிக்க வேட்டை ஆடுகின்றனர். அதன் விளைவுதான் இந்தக்கடத்தல்.

### அ தி மு க வுக்கு வேண்டுகோள்

தி மு க வையும், ஆளும் காங்கிரஸ் கட்சியையும் வேரோடும் — வேரடி மண்ணோடும் வெட்டி வீழ்த்த எம். ஜி. ஆர். தயாரானுல் மார்க்சிஸ்டுகளான நாங்கள் சேர்ந்து நின்று போராடத் தயார். உங்களின் உண்மைத் தோழர்கள் மார்க்சிஸ்ட்கள்தான. ஸ்தாபன பலம் கொண்ட இயக்கமும் கூட, இந்த நாடாளுமன்ற தொகுதியில் வலது கம்யூனிஸ்டும, இண்டிகேட்டும் பெயரளவில் தான் உள்ளனர். சரியான அடிகொடுக்க இது சந்தர்ப்பம். சிந்தித்து சீர் தூக்கி பார்த்து உங்கள் தலைமைக்கு எடுத்துக்கூறி செயல்படுங்கள்! எனக் கூறி முடித்தார்.

---

### புகளூர் சர்க்கரை....

(3-ம்பக்கத் தொடர்ச்சி)

தவர்களுக்கு மட்டும் லாக்கவுட் என்று ஆலை நிர்வாகம் (பார்ஷியல்) நோட்டீஸ் போட்டது.

மூன்று சங்கத் தொழிலாளர்கள் சுமார் 700 பேர் வெளியிலிருந்து போராடிக் கொண்டு வருகிருர்கள்.

ஆனல் ஏ. ஐ. டி யூ. சி. சங்கத் தலைமையின் வற்புறுத்தலின்பேரில் அதன் தொழிலாளர்கள் ஷிப்டுக்கு 50 பேர் சென்று வருகிருர்கள்.

இந்தச் சூழ்நிலையில் கரும்பு வளர்ப்போர் சங்கத்திலிருந்து கரும்பு வெட்டுவதில்லை என்று திட்டவட்டமாக முடிவு செய்துள்ளார்கள். இதற்கிடையில் சில விவசாயிகள் கரும்பு வெட்டி அனுப்புகிருர்கள். ஆனல் 1500 டன் நாள்ஒன்றிற்கு அறைக்க முடியாது. குறைந்த கரும்பு அறைப்பதால் பெருத்த நஷ்டம் ஏற்படும்.

இவைகளையெல்லாம் எதிர்த்து மூன்று சங்க தொழிலாளர்களும் கட்டுப்பாடாகவும, சோர்வடையாமலும உற்சாகமாகப் போராடி வருகிருர்கள்.

---

இந்திய கம்யூனிஸ்ட்கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில், தீக்கதிர் அச்சகத்தில், ( 13, முதல்சந்து, வடக்குச் சித்திரை வீதி, மதுரை-1) அச்சிட்டு வெளியிடுபவர்: ஆசிரியர் கே. முத்தையா.